REGISTERED—M 108.

Vol. XVII.] MARCH, 1909. [No. 3

வேசான காகிதப்பதிப்பு.
தனிப்பிரதி, 5½ அணா.
பழைய பிரதி, 6 „

சந்தாவிலை விவரம்.
ஒருவருஷத்துக்கு ரூ. 4
6 மாதத்துக்கு „ 2-2




அறிவைப் பரவச் செய்வதற்கான மாதாந்தரத் தமிழ்ப் பத்திரிகை.

DEVOTED TO PRACTICAL TRUTH AND KNOWLEDGE.

அறிவுடையாரெல்லாமுடையாரறிவிலா ரென்னுடையரேனுமிலர்.—திருக்குறள்.

A POPULAR NEW REVIEW & TAMIL MONTHLY
Estd. May, 1892.

கற்க கசடறக் கற்பவை கற்றபின் நிற்கவதற்குத் தக.—திருக்குறள்.

ILLUSTRATING THE PRINCIPLES OF EDUCATION, PSYCHOLOGY, SOUL-CULTURE & ETHICS, ADAPTED FOR USE IN HOMES & SCHOOLS

Hitch your wagon to a star-4,-Emerson.

**CONTENTS.** PAG



அடக்கம். பக்கம்



"Our Theism is the Purification of the Human Mind"— Emerson.

Thick Paper Edition for Patrons.] *PUBLISHED BY* [Minimum Subscription Rs. 5.

The Secretary, Diffusion of Knowledge Agency,

*Lalitâlaya, Mylapore, Madras, S.*

For The Viveka Chintamani Publishing Committee.



Thin Paper Edition for the People.] [Subscription Price: Yearly Rs. 4

*"Like a spider, like the earth, and like a living creature He produces the Universe."—Upanishad.*

# The Viveka Chintamani.

**ESTABLISHED 1892.**

***The Oldest and The best Tamil Monthly: yearly Rs.4. Thick Paper Edition Rs.5. in Advance.***

**Subscriptions registered by Volume only and cannot be discontinued in the middle of a Volume.**

LALITALAYA, MYLAPORE, S.

**EDITOR**
**C. V. SWAMINATHA AIYAR.**

*Madras, January 1909*

# விவேகசிந்தாமணி.

வருஷசந்தா ரூ. 4. வாலியம் கணக்காகவே சந்தா பதிவுசெய்யப்படும்.

## விவேகசிந்தாமணிக் கமிட்டி விண்ணப்பம்.

ஆரிய சகோதரர்களே, விவேகசிந்தாமணி, இப்பொழுது மாதாரம்பத்தில் ஒழுங்காத வெளியாகி வருகிறது. இத்துடன் தங்கள் பார்வைக்கு ஒரு பத்திரிகை யனுப்பியிருக்கிறோம். 'விவேகசிந்தாமணி யென்ற பெயர்க்கேற்றபடி இதில் விவேகத்தை விளைக்கக்கூடிய அற்புத விஷயங்கள் நிறைந்திருக்கும். இக்காலத்துக்கேற்றபடி தேசாபிமானம், ஸ்வபாஷா ஞானம், நீதிபோதம், வேதாந்தசாரம், சுதேச விதேச சரித்திரங்கள், மஹாத்மாக்களின் அமிருத வசனங்கள், பகவான் அர்ச்சுனனுக்குப் போதித்த நித்யானுகூல ஸாதனங்கள், அப்போதப்போது நடக்கும் விசேஷ ஸம்பவங்கள், ஆகிய இவைகள் அடங்கப் பெற்றுச் செந்தமிழ் நடையில் எழுதப்பட்டுத் தமிழ்நாடெல்லாம் ஜ்வலித்துவரும் இம்மாதாந்தப் பத்திரிகைக்கு ஒவ்வொருவரும் சந்தாதாரராகச்சேர்ந்து ஆதரித்துவரக்கோருகிறோம். மனிதர்களுக்குஉய்யும் வழிகாட்டி அவர்களைக் கடத்தேறச்செய்யும் உண்மையான ஸத்குருவைப் போல, விவேகசிந்தாமணியை வாசிப்பவர்களுக்கு அது உற்றவிடத்து தவியாய் நின்றுவிவேகத்தைவளர்க்கும் குருவாய்த்தோற்று மென்பதிற் சிறிதும் சந்தேகமில்லை. பத்திரிகையை முழுதும் படித்துக் கையொப்பக்காரர்களாய்ச் சேரக் கேட்டுக்கொள்ளுகிறோம். இப்பத்திரிகை சென்ற பதினாறு வருஷங்களாக இடையறாது நடைபெற்று வருகின்றது. இடையே அச்சாபீஸார் செய்த தவறுதலால் ஆகஸ்டு ஸெப்டெம்பர் மாசத்து சஞ்சிகைகள் தவக்கப்பட்டாலும், அதனால் குற்றமின்றி அதைத்தொடர்ந்து பத்திரிகை நடந்துவர ஏற்பாடாகி 16-வது வால்யம் 12-சஞ்சிகைகளும் சரியாக முடிந்துவிட்டன.

## 1909 ஹூ ஜனவரி மீ முதல் 17-வது வால்யம் ஆரம்பம்.

விவேகசிந்தாமணிக்குச் சந்தாதாரர்களாகச்சேர விரும்புகிறவர்கள் அதன் ஒரு வருஷசந்தா ரூபாய் நாலையும் முன்பணமாக, மைலாப்பூர், லலிதாலயம், அறிவைப்பரவச்செய்யும் ஏஜன்ஸி காரியதரிசி ஸி வி. ஸ்வாமிநாதையர் பேருக்கு அனுப்பி, அவரவர்கள்பேரை ரிஜிஸ்தர் செய்துகொள்ளவேண்டும். முன்பணமனுப்பாதவர்களுக்கு V. P. P. யில் ஒரு வருஷ சந்தாவுக்குப் பத்திரிகை யனுப்பப்படும்.

" ஸி. வி. ஸ்வாமிநாதய்யர்.
பத்திராசிரியா.

எம். கே. நாராயணஸ்வாமி ஐயா, பி. ஏ. பி. எல்.,
விவேகசிந்தாமணிக்கமிட்டி காரியதரிசி

ஐயா,

## ORDER FORM.

190

Please enrol me as a subscriber and send the Vivekachintamani by V. P. P. for a year's subscription, viz. Rs. 4-1-0

நீங்கள் அனுப்பிய மாதிரிக் காபியை வாசித்துப் பார்த்தேன். விவேகசிந்தாமணிக்கு என்னையும் ஒரு சந்தாதாரராகச் சேர்த்துக்கொண்டு முதல் சஞ்சிகையை ஒரு வருஷ சந்தா ரூபா 4-1-க்கு V. P. P மூலமாக அனுப்பக்கோருகிறேன். தவறாமல் தபாலாபீஸில் பணம் கட்டிப் பெற்றுக்கொள்கிறேன்.

பேர் ______________________

தொழில் ______________________

ஊர் விலாசம் ______________________

போஸ்ட் ______________________

“ *Give me not, O God, that blind, fool faith in my friend, that sees no evil where evil is, but give me, O God, that sublime belief, that seeing evil I yet have faith.”*
“*Seek Truth wherever you find it,” But “Make your choice and stick to it till you reach the End.”*

ஸத்யம் வத,—**Speak the Truth.**

**“Hitch Your Wagon to a Star.”** **“To Thine Own Self be True”**




அன்பேயவன் : அறிவேசக்தி : ஓம் தத்சத்.] [God is Love: Knowledge is Power. *Aum*

ஸத்யமே ஜெயம்—**Satyameva Jayati.**


புத்தகம் **17.**] **1909**-௵ மார்ச்சுமீ [சஞ்சிகை **3.**


## True Men and False, Or, Saintly Men and Hypocrites.

“A man's power to connect his thought with its proper symbol and so to utter it, depends on the simplicity of his character, that is upon his love of truth and his desire to communicate it without loss. The corruption of man is followed by the corruption of language. When simplicity of character and the sovereignty of ideas is broken up by the prevalence of secondary desires, of riches, of pleasure, of power, and of praise—and duplicity and falsehood take the place of simplicity and truth, the power over nature as an interpreter of the will, is in a degree lost; new imagery ceases to be created; and old words are perverted to stand for things which are not; a paper currency is employed, when there is no bullion in the vaults. In due time the fraud is manifest, and words lose the power to stimulate the understanding or the affections.”—*Emerson.*

“Words are like blank checks on the Bank of Thought, to be filled with meaning by the past & future earnings of the Intellect.”—*J. W. Powell.*

## நிஜமனிதர்களும் பொய்மனிதர்களும் அல்லது மஹாத்ம துராத்ம வித்தியாஸம்.

---

“மனஸ்யேக வசஸ்யேக கர்மண்யேக மஹாத்மனாம்
மனஸ்யந்யத் வசஸ்யந்யத் கர்மண்யந்யத் துராத்ம
[னாம்.”

ஆத்மா ஒன்றே. அது பலவிதமாகத் தோற்றுகிறதுதான் பிரபஞ்சமாயை யென்று சொல்கிறது. பிரபஞ்சம் என்றால் தோற்றப்படுவது; மாயை என்றால் மயக்கம். அறிவானும் அறி பொருளும் ஒன்றேயாகின் அறிவு என்னும் ஆத்மதரிசனம் உண்டாம். அறிவு ஒன்றாயின் அறிவானும் ஒன்றேயாக வேண்டும். ஆனால் அறிவு பேதமும் அறிவான் பேதமும் உலகத்திலிருக்கக்காண்கிறோம். இந்த பேதம் எப்படி உண்டாயிற்றெனின் உபாதி பேதத்தால் என்று சொல்வோம். கண்ணும், காண்பானும் ஒன்றேயானவிடத்தும், கண்ணில் போட்டுக்

கொண்டு பார்க்கும் கண்ணுடியின் வர்ணபேதத்துக்குத் தக்கபடி பலவர்ணங்களும் தோற்றப்படுவதுபோல, அறிவானும் அறிவும் ஒன்றேயானவிடத்தும் அறிவதற்குக் கருவியாயுள்ள பொறிபுலன்பேதங்களால் அறிவும் பல விதமாகப் பரிணமித்துத் தோன்றும். இப்படித் தோற்றும் பேதமே ஜீவகோடிகளின் உற்பத்திக்குக் காரணமாம்.

விசாலமான மனமுள்ளவர்களை மஹத் அறிவுள்ளவர்களென்றும், குறுகலும் புன்மையுமான அறிவுள்ளவர்களை புல்லறிவாளர் என்றும் சொல்கிறேம். மஹத் அறிவுள்ளவர்களை மஹாத்மாக்களென்றும், புல்லறிவுள்ளவர்களை துராத்மாக்களென்றும் சொல்லுகிறதுண்டு. இவர்களிருவருக்கும் வித்தியாஸமென்னவெனில், முதலவர் மெய்யைத் தழுவி ஸ்த்யத்தைக் கடைப்பிடித்து நிற்பதனுல் ஸர்வசக்தியும் வாய்ந்தவர்களாயிருக்கிருர்கள். இரண்டாவதவர், அற்ப புத்தியுள்ளவர்களாதலால், அற்பத்தில் சுகித்து, அற்பத்தை யனுசரித்து அற்பவாழ்வு வாழ்கிருர்கள். மஹாத்மா தோன்றும் ஜகத்தையெல்லாம் தானுகப் பார்ப்பன். துராத்மாவோ தோன்றுவதையெல்லாம் தன்னுடையதாகவேணுமென்று அபிமானித்து ஆசைவலைப்பட்டுழலுவன்.

மஹாத்மாவுக்கு செல்வாக்குண்டு. துராத்மாவுக்கு செல்வாக்கில்லை. என் இந்த வித்தியாஸமென்ருல், மஹாத்மா தன்னைப்பார்த்த அஹக்கண்ணுல் எல்லாவற்றையும் தானுகப் பாவித்து தான் எல்லாவற்றிலுமிருக்கக்காண்கிருன். இவனை ஆசை என்பது பாதிக்காது. ஆசை பாதிக்காது என்ருல் என்ன? இவன் ஆசைப்பட இவனுக்கு அன்னியமாக ஒன்றுமில்லையாதலால், ஆசைக்கு இடமில்லை. அப்படி ஒன்றில் ஆசைவைத்தால், அது தான் மாத்திரமாயிருப்பதால், தேஹத்தைத் தானென்று அபிமானிப்பவனுக்கு, தேஹாதி அவயவங்கள் சொன்னபடி கேட்பதுபோல, ஜகத்தைத் தானென்று அபிமானிக்கும் மஹாத்துக்கு ஜகமெல்லாம் சொன்னபடி கேட்கும். இப்படி ஜகமெல்லாம் சொன்னபடி கேட்பதின் மர்மமென்ன? சொல் என்பது வைகரிவாக்குக்குமட்டும் போராது. ஆனல் பரை, பச்யந்தி, மத்யமை யென்னும் மூன்றும் பொருந்த இருந்தது வாயினுல் வார்த்தையாக வெளிவரும்பொழுது அது சொல் என்று சொல்லத்தகும். அப்படிப்பட்ட சொல் "சித்தர் சொல்" அல்லது சித்தர்வாக்கு என்று சொல்லப்படும். சித்தர்வாக்கு எப்போதும் பலிக்கும்.

என் சித்தர்வாக்கு எப்போதும் பலிக்க வேண்டும்? அவர்கள் "வாகீச்வரீம் ஸாக்ஷாத்" என்ற ஆப்தவாக்கியப்படி, பரை முதலாகவுள்ள நாலுவகையிலும் வாக்கோடு வாக்காக ஈடுபட்டு பிரத்தியக்ஷமாகவே வாகீச்வரியாக விருக்கிருர்கள். அதாவது, வாகீச்வரிக்கும் அவருக்கும் பேதமில்லை. இவர்கள் மனமொழி மெய்கள் ஒன்ருகப் பொருந்த நடப்பார்கள். ஏனென்ருல், பேதபாவனையென்பதே இவர்களிடம் கிடையாது; உதிக்க நிமித்தமுமில்லை. இந்த செல்வாக்கு இலகுவில் சித்திக்கத்தக்கதல்ல. "சித்தன்போக்கு சிவன் போக்கு" என்றபடி சிவனை அதாவது நித்யஸ்வரூபியாய் விளங்கும் உண்மையை வழிபட்டு நடப்பவர்களுக்கே இந்த வாக்கு சித்தியுண்டாகும். மற்றவர்களுக்கு ஒருக்காலுமுண்டாகாது. வாச்சாஞானமும் பயன்படமாட்டாது. வேஷம்போடச்செய்து துர்வழியில் செலுத்துமாதலால் அப்படிப்பட்டவர்களையெல்லாம் துராத்மாவென்று ஒரே வகுப்பாய் வகுத்துவிட்டார். மன, மொழி, மெய், மாறுபட்டிருப்பவரெல்லாம் "துராத்மனும்." மஹாத்மனுக்குச் செல்வாக்கு (வாக்குசித்தி) என்னமாவுண்டாகிறதென்றும், அது தவறுவதற்குக் காரணமென்னவென்பதையும் எமர்ஸன் என்னும் அமெரிக்காதேசத்து ஆத்மஞானி நன்ருகச் சொல்லியிருக்கிருர். அவருடைய ஆப்தவாக்கியத்தை இதன் தலைப்பில் எடுத்து

வரைந்திருக்கிறோம். அவர் சொல்வதின் கருத்து தத்துவார்த்தத்துக்கு முற்றும் ஒத்திருப்பதால் அது ஸத்யவாக்கே. ஒரு ஆத்மன் சங்கல்பரூபமான தன்மனத்தே யுதிக்கும் எண்ணத்தை அதன் சரியான அடையாளம் (அதாவது பிரதீகம்) வெளிப்பிரபஞ்சத்தில் என்னவுண்டோ அதோடு இசைத்து அதற்குச்சரியாக அதை உச்சரிக்க ஸாத்வீகம் அவசியம். ஸாத்வீகம் என்றால் ஸத்வகுணம். இது ஸத்யத்தைநேசித்து உண்மைக்குக்குறைவுவரக்கூடாதென்றும், எதையும் பூரணமாய் அனுபவித்துப் பூரணமாய்த் தெரியப்படுத்தவேண்டுமென்றும் அவனுக்கிருக்கும் ஆஸ்தையைப்பொறுத்ததாக விருக்கிறது. ஸத்யவிருதமில்லாதார்க்கு வாக்கு சித்தியுமில்லை, செல்வாக்குமில்லை. ஸத்யம் தவறினால் வாக்தவறிவிடும். மனிதன் பேதபாவனைக் கிடங்கொடுத்தால், வாக்கும் பேதப்பட்டுப் போம். ஸாத்வீகமும் லக்ஷியமும் குறைந்து, அவை பூரணமா யிருக்கவேண்டியவிடத்தில் ஆசை, க்ஷாமம், அதிகாரம் முதலிய தாழ்ந்ததும் இரண்டாந்தரமுமான இச்சைகள் குடிபுகுந்தால், "இச்சாசக்தி உமாகுமாரி" யென்றசிவசூத்திரத்தின் உண்மையை உணர அசாத்தியமாகிறது. பிரகிருதி தர்மத்துக்கு விரோதமாக இவன் நடந்துகொள்ளத் துணிந்துவிட்டதால், பிரகிருதியும் இவனுக்கு விரோதமாக நடக்கத் துணிந்துவிட்டது. மனம்பொருந்தாத் தம்பதிகள்போல் இவனுடைய இச்சையும் பிரகிருதியும் விரோதப்பட்டுத் தாறுமாருக இயங்கத் தலைப்படுகின்றன. புருஷனும் பிரகிருதியும் க்ஷேத்திர க்ஷேத்திரஜ்ஞ சம்பந்தமுள்ளவர்களா யிருக்கவேண்டியிருக்க, அதற்கு மாருகவுள்ள விரோதபாவம் லபித்து துன்புற்றுழலுகிறார்கள். மனம் பொருந்தாத் தம்பதிகளுக்குப் பிள்ளை பிறப்பது எப்படி துர்லபமோ அப்படிப்போல புருஷப்பிரகிருதிவேற்றுமை கண்டவிடத்து "யன்மனஸ் திரிஜகத் சிருஷ்டி ஸ்திதி கர்மகிருத்" என்னும் சுருதிவாக்கியப்படி திரிவிதமான (ஸ்தூல ஸூக்ஷ்ம, காரண) ஜகத்தையும் சிருஷ்டித்துக் காப்பாற்றி யழிக்கும் சக்திவாய்ந்த மனஸ், சிருஷ்டி சக்தியிழந்ததாய்விடுகிறது. யௌவன காலமெல்லாம் நாயும் பூனையும்போல் கூடிவாழ்ந்து புத்திரசௌபாக்கியம் பெறக் கொடுத்து வைக்காத தம்பதிகள், முதுமைப் பருவமடைந்தபொழுது பிறர்பெற்ற குழந்தையை அபிமானித்து அபிமானபுத்திரன் கொள்வதுபோல, வாக்கு தன் சக்தியிழந்து, "இல்லாததை யிருக்கென்று" காட்டும் ஜோடிப்பு வார்த்தையாக ஆய்விடுகிறது. வார்த்தைக்கு லக்ஷியார்த்தம் குன்றிப்போகவே, வாக்கு வீரியம் குறைந்து, அதன் வாச்சியார்த்தமும், பதார்த்தமும் முற்றிலும் பேதப்பட்டுப்போக நேரிடுகிறது. நேரிடவே, "பேப்பர் கர்ரென்ஸி" என்று காகிதத்தில் 100-ரூபாய் என்று அச்சிட்டு வழங்குவதுபோல், லக்ஷியமில்லா வார்த்தை வழங்கப்படலாகிறது. பொக்கிஷத்திலே பொன்னிருந்து கர்ரென்ஸி நோட்டு வழங்கிவந்தால் சிலாக்கியமாயிருக்கும். பொக்கிஷத்திலே பொன்னில்லாத போது கர்ரென்ஸி நோட்டுக்கு மதிப்புண்டாகுமா? உண்டாகாதுபோலவும் உண்மை தெரிந்தவிடத்து முழுமோசமாய் முடிவதுபோலவும், வார்த்தை மோசம் காலக்கிரமத்தில்தானே வெளியாகிவிடும். வெளியானால் பொக்கிஷத்தில் பணமுள்ளவரையில் செலாவணியான உண்டியல் பொக்கிஷத்தில் பணமில்லாதபோது செல்லாது போவதுபோலும், அர்பத்நட் செக்கு அவமதிப்படைந்ததுபோலவும், வார்த்தைக்கு அறிவையூட்டி மனக்கிளர்ச்சியை யுண்டுபண்ணும் சக்தி குன்றி அவமே கழிய நேரிடுகிறது. பிரகிருதியினிடத்து வாக்குச் செல்லாதுபோகவும், செல்வாக்குப் போய்விடுகிறது. செல்வாக்குப்போனால் மனிதன் வாயிழந்தவனாகிறான். வாயிருந்துபேசியும் அவன் வாக்கு பறைமோளத்துக்கொப்பாய் அருவருப்பை யுண்டுபண்ணுமேயன்றி உள்ளத்திலூன்றி உண்மையை யுணர்த்தும் சக்தியுள்ளதாகாது. இப்படி வாயிழந்தவன்

யாரோ அவனே 'மானிடப்பதர்' என்றுசொல்லப்படுவான். பதர் நெல்லோடுசேர்ந்திருந்தும் நெல்லின் சேர்க்கையினால் மட்டுமன்றி ஸ்வயமாக மதிப்பிலதுபோல, மன, மொழி, மெய்கள் பொருந்தாத மானிடப்பதர்கள் ஜனசமூகத்தில் ஏதோ மானிடச்சேர்க்கையால் மதிப்புற்று விளங்கினாலும், ஸ்வயமாக மதிப்பற்றவர்களாகவே யிருப்பார்கள். இவர்களால் ஜனசமூகத்துக்கு மொத்தத்தில் மதிப்புக் குறைவேயன்றி மதிப்பேற்றம் சிறிதுமில்லை. எந்த ஜனசமூகம் இம்மானிடப் பதர்களைத் தன்னுள் வைக்காது தள்ளி வெளியேற்றி வருகிறதோ அதுவே, ஜாதிவீரியம் குன்றாது வளர்ந்து ஓஜஸும் தேஜஸும் பெற்றுப் பிரகாசிக்கும். "ஓஜஸும் தேஜஸும் பெற்றுப்பிரகாசிக்கும்" என்று நாம் சொன்னதையே உலக நடையில் "பேரும் கீர்த்தியும் பெற்றுவிளங்கும்" என்றுசொல்வர். சொல்லினும் ஓஜஸின்றி மனிதனுக்கு மனிதன் என்கிறபேர் பொருந்தாது. அப்படியே தேஜஸ் இன்றி கீர்த்தியுமில்லை. இது சத்யம். மனிதனுக்குச் சொன்னது ஜன சமூகத்துக்கும் பொருந்தும். ஏனெனில், இரண்டுக்கும் வியஷ்டி சமஷ்டி பாவங்களன்றி வேறு வேற்றுமைப்பாடில்லை.



## THE HOLY CITY OF MUTTRA.

### வடமதுரை.

### I

இது டெல்லிக்கும் ஆக்ராவுக்கும் மத்தியில் ஜி. ஐ. பி. இருப்புப்பாதையின் பேரிலுள்ள ரயில்வே ஸ்டேஷன். மட்ரா ஜில்லாவுக்கும் அந்தப்பெயருள்ள தாலுக்காவிற்கும் பிரதானபட்டணம். ஜனத்தொகை 260,000. இது கலெக்டர் ஆபீஸ், ஜில்லாகோர்ட்டு, முனிசிப்கோர்ட், ரிவினியு ஆபீசுகள் முதலிய ஜில்லாவின் பிரதான பட்டணத்திற்கு அவசியமான ஒவ்வொரு அங்கங்களையுமுடையது. இது யமுனை என்ற புண்ணிய நதியின் மேல்பக்கத்துக்கரையோரத்திலுள்ள வெகு சிங்காரமும் செழிப்பும் ஒருங்கே பொருந்தி சுமார் பன்னிரண்டு சதுரமைல் விஸ்தீரணமுள்ளது.

இதின் பூர்வ சரித்திரத்தைக் கருதி இதை நேரிட்டுப்பார்க்க அவாக்கொண்டு சென்று, அவ்விடத்திலுள்ள ஒவ்வொன்றையும் கவனித்து குறித்துக்கொண்டவைகளிலிருந்து இதை வரையலானோம்.

அயோத்திமாநகரத்தில் ஸ்ரீராமபிரான் ஏகசக்ராதிபதியாய் அரசாண்டு வருங்காலத்தில், யமுனா நதிக்கரையிலிருந்த ஓர் பிர்மாண்டமான வனத்தில் மது என்ற பெயருடன் ஒரு இராக்ஷசன் வசித்து வந்ததாகவும், இவனிருந்த வனத்திற்கு மதுவனமென்ற பெயர் வழங்கி வந்ததாகவும், இவனிறந்த பிறகு இலவணன் என்ற மதுவின் குமாரன் மிதமீறி அடாதகாரியங்களைச் செய்து வந்தபடியால், ஸ்ரீராமர் தமது சகோதரர். சத்ருக்னனை யனுப்பி அவனை ஹதம்செய்து, அந்த வனத்தை யழித்து ஒரு திவ்வியமான பட்டணத்தைக்கட்டி யதற்கு மதுபுரி என்ற நாமமிட்டு லவணன் தம்பியாகிய அரியஸ்வனுக்கு அப்பட்டணத்தை யாளும்படி திட்டம் செய்ததாகவும், அது முதற்கொண்டு இதற்கு மதுராபுரி என்ற நாமமே வழங்கி வருகிறதாகவும் தெரியவருகிறது. இந்த கிரேதாயுக முதற்கொண்டு நாளதுவரை இப்பட்டணமடைந்த உன்னதச் சிறப்பையும் சீர்கேட்டையும் எழுதுவதென்றால் ஓர் பெரும்பாரதமாகும். ஆதலின் சுருங்கக்கூறி வருவோம்.

இந்த அரியஸ்வன் யாதவகுலத்திற்கு மூலபுருஷனென்று கருதவேண்டியிருக்கிறது. இவன்சந்ததியில் சூரனென்ற அரசனுக்கு—வசுதேவன், தேவபாகன், தேவசிரவன், பிரதபாண்டு, ஆனகன், கிரஞ்சேயன், கங்கன், இஷைதகன், வ்ச்சகன், பகன் என்ற பத்துப்பிள்ளை

களும், பிருதை சிரததேவா, சிரதகீர்த்தி, சிரதசவா, ராஜதேவி என்ற ஐந்து பெண்களும் பிறந்தார்கள். சூரன் என்ற இந்த ராஜன் பிருதை என்ற தன் பெண்ணை அபுத்திரனும் சகாவுமான குந்திராஜனுக்குக் கொடுக்க, அவள் பாண்டுராஜன் மனைவியாகி பஞ்ச பாண்டவர்களைப் பெறுகிறாள்.

வசுதேவனுக்கு தேவகியினிடமாக ஸ்ரீ கிருஷ்ணரும், இவர்களுடைய தாயாதியும் சேதிராஜனுமான தாமகோஷாவுக்கு சிதசாசி என்பவளிடம் சிசுபாலனும் பிறந்தார்கள்.

பிரகஸ்பதியின் மனைவியாகிய தரையானவள் சந்திரன்மேல் மோகப்பட்டுக் கூடி புதனைப் பெற்றதாகவும், புதன் இளை என்பவளிடமாக புரூரவனைப் பெற்றதாகவும், இவன் ஊர்வசியினிடமாக ஆயுரசனை யடைந்ததாகவும், ஆயுரசன் வம்சத்தில் நகுஷனும், யாயாதியும், யாதவனும், விதர்ப்பனும், அகண்டனும், போஜனும் உதித்ததாகவும், இவனுக்கு தேவகன், உக்கிரசேனன் என்ற இரண்டு குமாரர்கள் பிறந்ததாகவும், தேவகனுடைய குமாரத்தியே தேவகி என்றும் தெரியவருகிறது.

இந்த தேவகியைத்தான் வசுதேவர் மணந்து அவதார புருஷராகிய ஸ்ரீ கிருஷ்ணரைப் பெற்றனர். இந்த கிருஷ்ணர் விதர்ப்பதேசத்து அரசனாகிய பீஷ்மகன் குமாரத்தி ருக்மணியென்ற மாதை விவாகம் செய்துகொண்ட வைபவத்தைப்பற்றி ருக்மணி கல்யாணமென்பதாக நமது பாகவதர்கள் நடத்த எவ்வளவோ தடவை கேட்டிருக்கிறோம்.

ஸ்ரீ கிருஷ்ணருக்கு ருக்மணி தேவியிடம் பிறந்த குமாரன் பிரத்யும்னன். இவனுக்கு ருக்மணிதேவியின் கூடப்பிறந்தவன் ருக்மனுடைய குமாரத்தி ருக்மவதியை விவாகம் செய்யப்பட்டது. இந்த பிரத்யும்னனை மன்மதனவதாரமென்றும் ருக்மவதியை இரதியின் அவதாரமென்றும் புராணம் கூறுகின்றது. இந்த பிரதியும்னனுக்கு அனுருத்திரன் என்பவன்பிறந்ததாகவும், அவன் உஷா என்னும் மாதை விவாகம்செய்து வஜ்ரதன் என்ற பலாட்டியனைப் பெற்றதாகவும், இவன் ஸ்ரீ கிருஷ்ணதேவருக்குப் பிறகு மதுராபுரியை வெகுகாலம் ஆண்டுவந்ததாகவும் தெரியவருகிறது.

ஸ்ரீகிருஷ்ண பகவானுடைய பிதாவாகிய வசுதேவர் தேவகியை விவாகம் செய்துகொள்ளுவதற்கு முன் ரோஹணி என்னும் மாதினிடமாக பலராமர் என்ற பலவானை பெற்றிருந்தார்.

போஜனுடைய மற்றொரு குமாரனாகிய உக்கிரசேனன் மதுராபுரிக்கு அரசனாகி யாண்டுவரும்பொழுது கம்சன் என்ற கொடியவனைப்பெற்றான். இவன் மகதநாட்டின் அரசனாகிய ஜராசந்தனுடைய புத்திரி இராஜீவலோசனியைமணந்து, தன்மாமனாகிய ஜராசந்தனுடைய உதவியைப்பெற்று, தானே சிம்மாசனாதிபதியாய் மதுராவை யாண்டுவந்தான். இவனுடைய ஹிம்சையைப் பொறுக்கமுடியாமல் குடிகள் மிகவும் வருந்தினார்கள். பலவானாகிய இராஜன் கொடுங்கோலியற்றினால் குடிகள் செய்வதென்ன? கடவுளை முன்னிட்டு முறையிடுவதைவிட வேறுவழியுமுண்டோ? ஆதலின் அவர்களுடைய முறைப்பாட்டுக்கு செவி சாய்த்த பகவான் "கம்சனுடைய கொட்டத்தையடக்க தேவகியினிடமாக எட்டாவது பிரசவமாய் தாம் உதிப்பதாக ஆகாய வாணியாய் கூறினர்.

இதையறிந்த கம்சன் வசுதேவரையும் தேவகியையும் வரவழைத்து சிறையிலிட்டு கடுங்காவலில் வைத்தனன். இப்படியிருக்கையில் தேவகிக்கு ஒவ்வொரு குழந்தையாக ஆறு குழந்தைகள் பிறந்தன. அவைகள் ஒவ்வொன்றையும் கொடியோனாகிய கம்சன் கொன்றுவிட்டான். தேவகி மறுபடியும் கர்ப்பமடைந்து, பூர்ணமாக, பகவான் கம்சனுடைய கடு

ரத்தன்மையைக் கருதி தேவகியின் கர்ப்பத்திலிருந்தசிசுவை யமுனாநதியின் அக்கரையிலிருந்த வசுதேவருடைய மற்றொரு மனைவி ரோஹணியின் வயிற்றுக்கு அற்புதமாக ஆகரிஷித்துவிடவே, அவள் வயிற்றில் தான் பலராமன் என்ற வீரர் பிறந்தார்.

இவ்விதமாக தேவகி பெற்ற ஏழுபிள்ளைகளின் கதியும் நேர, தேவகி எட்டாந்தடவையும் கர்ப்பமடைந்து பரீதாபிவருஷம் ஆவணி மாதம் கிருஷ்ணபக்ஷம் அஷ்டமி திதி, ரோகணி நக்ஷத்திரமும் கூடிய திவ்வியமான சுபதினத்தில் ஸ்ரீ கிருஷ்ணர் பிறந்தார். இத்தினத்தையே மகாவிசேஷமாகக்கொண்டு இந்த மதுராபுரியில் கோகுலாஷ்டமி உற்சவமென்பதாய், ஒவ்வொரு ஆலயத்திலும் தீபதூபாலங்காரங்களும், மெரவணைகளும் உரியடியுற்சவம், வழுக்குமரஉற்சவம், கோலாட்டம் முதலிய பலவிதமான உற்சவங்களை, ஆடல், பாடல், வாத்தியம், பாணவேடிக்கை முதலியவைகளுடன் நடத்தி ஜனங்கள் குதூகலமடைவதுடன், இப்பரதக்கண்டத்தின் ஒவ்வொரு பாகத்திலும் இந்த தினத்தை பெரிய விரததினமாகக்கொண்டு பட்னியிருந்து இரவில் அப்பகவானை விக்கிரகரூபத்தில் அர்ச்சித்து, பூஜித்துப்போற்றி வணங்கி பண்டிகை கொண்டாடுகிறார்கள். கிருஷ்ணலீலைகளை பிச்சைக்காரர்களும் பலவித வர்ணமெட்டுகளுடன் பாடிக்கொண்டு வீடுவீடாக வருவதை நாம் இன்னும் பார்க்கிறோம்.

இக்குழந்தை அதிக அற்புத ரூபலாவண்ணியமுள்ளதாயிருந்தபடியால், கம்சன் இச்செய்தியை யறிவதற்குமுன் வசுதேவர், இரவிலேயே குழந்தையை பொன் தட்டில் எடுத்துக்கொண்டுவரவும், கோட்டையின் பல வாயில்களின் கதவுகள் தானே திறந்து வழிவிடவும், உருவியகத்தியுடன் நின்ற காவல் வீரர்கள் மாயாமயக்கத்தினால் மெய்மறந்து தூங்கவும், கண்டவசுதேவர் ஆநந்தங்கொண்டு யமுனைநதியைக் கடந்து அக்கரையிலுள்ள கோகுலத்திற்கு செல்லக்கருதி நதிக்கரையை யடையவே, அந்நதியானது பெருக்கெடுத்து இருகரைகளுந்தோன்றாமல் பிரவாகிப்பதைக் கண்டு, ஒரே தைரியமாய் பிரவாகத்திலிறங்க, அந்நதியின் நீர் பசிவாருனாகிய குழந்தையின் பாதப்பரிசமானதும், வசுதேவர் நடந்துசெல்லத்தக்க பாதையைவிட்டு விலகிநிற்கவே, வசுதேவர் ஆநந்தங்கொண்டு நடந்து அக்கரை சேர்ந்து கோகுலம் என்ற இடையர் கிராமத்தில் சென்று பெரிய குடித்தனக்காரராகிய நந்தன் வீட்டைத்தேடிச்செல்ல, அங்கு அப்பொழுது தான் அவன் மனைவி பெற்ற பெண்ணை எடுத்துக்கொண்டு, ஸ்ரீ கிருஷ்ணரை யாருக்கும் தெரியாமல் அந்த எசோதைஎன்ற மாதினிடம் விட்டுத் திரும்பி மதுராபுரிசேர்ந்து, பெண்குழந்தையை தன்மனைவியினிடத்தில் விட்டார்.

அப்பெண்குழந்தை யுடனே வீரிட்டழ வீரசூரர்களான காவல்காரர்கள் திடுக்கிட்டெழுந்து பார்த்து பெண்குழந்தையை எடுத்துக்கொண்டுபோய் கொடும்பாதகனாகிய கம்சனிடம் வைக்க, அவன் அதிக கோபாவேசத்துடன், தன்னைக்கொல்லவந்த பொல்லாத பிள்ளையிதுவே யென்றெடுத்து, பூமியில் ஓங்கியடித்து வாளால் வெட்டப்போகவே, அப்பெண்குழந்தை வீரிட்டழுது குமரிக்கொண்டு ஆகாயத்திலெழும்பி கீழேதரையில் நின்ற கம்சனை நோக்கி, “அடே கொலைபாதகா! உன்னைக்கொல்லப்பிறந்தகிருஷ்ணன் கோகுலத்தில் வளர்கிறான். என்னைக்கொல்ல உன்னாலியலாது” என்றுகூறி மறைந்தது.

இவ்வாக்கியங்களைக்கேட்ட கம்சன் கடுங்கோபமடைந்து கோகுலத்தில் மட்டுமல்ல, மற்ற சுற்றுப்புறங்களிலுள்ள ஒவ்வொரு இடத்திலும் நூதனமாய்ப்பிறந்த குழந்தைகளையெல்லாம் கொன்றுவிடும்படியாக உத்திரவு செய்ததன்றி வசுதேவரையும், தேவகியையும் சிறையிலிருந்து விட்டுவிடும்படி கட்டளையிட்டு மிகுந்த வியாகூலத்துடன் தனது அரண்மனைக்கேகினான்.

சிலநாள் கழிந்தபின் கோகுலநந்தன் தான் இராஜாங்கத்திற்கு கட்டவேண்டிய அரசிறை யை எடுத்துக்கொண்டு மதுராவுக்கு வந்த சமயத்தில் வசுதேவர் நந்தனைப்பார்த்து, "நந்தகோபனே! உனக்கு கிருஷ்ணன் என்பதாக ஓர் ஆண்குழந்தை பிறந்த சங்கதி தெரிந்து அதிக சந்தோஷமடைந்தேன். எனக்கு ரோகணியிடமாகப் பிறந்து கோகுலத்தில் வளர்ந்து வருகிற பலராமனையும் உனக்குத் தருகிறேன்" என, நந்தன் அதிக ஆவலாய் அங்கிகரித்துக்கொண்டு கோகுலஞ்சென்று இச்சங்கதியை எசோதையிடம் கூறி பலராமனையு மழைத்துக்கொண்டு வந்து அதிகஅன்புடன் இருகுழந்தைகளையும் வளர்த்து வந்தனன். இச்சமயத்தில்தான் கம்சன் பூதகி முதலானவர்களைக்கொண்டு கிருஷ்ணனைக்கொல்ல பலவித சதிமோசங்கள் செய்ததென்பதாகத் தெரியவருகிறது. இவனுடைய எண்ணம் எவ்விதத்திலும் கொஞ்சம்கூட நிறைவேறவில்லை. இச்சமயத்தில் ஸ்ரீகிருஷ்ணன் செய்த திருவிளையாடல்களை இப்பொழுதுதான் நடந்ததோவென்று எண்ணும்விதமாய் இம்மதுராபுரியிலுள்ள ஜனங்கள் தற்காலத்திலும் கூறுவதைக்கேட்க கல்நெஞ்சர்களான நாஸ்திகர்களும் ஆச்சரியமடைந்து ஆநந்தபரவசர்களாய் பக்திமேலிட்டு பகவானை துதிப்பார்களென்றால் மற்றவர்களுக்கு கேட்பானேன்.

கிருஷ்ணன் விளையாட்டுகளில் மிதமிஞ்சி அக்கம்பக்கத்து வீட்டுக்காரர்களுக்கும், வரவர கோகுலத்தாருக்கும் பலவித இடையூறுகள்செய்யத்தொடங்கவே, கிராமத்தார் நந்தகோபாலனிடம் இப்பாலகர்களுடைய வம்புகளைபற்றி முறையிட்டார்கள்.

ஸ்ரீபகவானே ஒரு குழந்தையாய் இந்த நந்தன் வீட்டில் வளரும்பொழுது அவனுக்கு எந்த விஷயத்தில்தான் குறைவிருக்கும்? ஒவ்வொன்றும் செழித்து கொழித்தன. கோவினங்கள் எதேஷ்டமாகப்பெருகி அவைகள் மேய்வதற்குமகா செழிப்புள்ளதாகிய கோகுலத்திலுள்ள மேய்ச்சற்தரையேபோதாமல் போனபடியால் நந்தன் தன் மனைவிகளோடு பிருந்தாவனமென்ற எதேஷ்டமான மேய்ச்சற் காடுகளையுடைய கிராமத்திற்கு வந்து வசிக்க நேரிட்டது முண்டு.

இவ்விடத்திலும் ஸ்ரீகிருஷ்ணருடைய கபடலீலைகள் நின்றபாடில்லை. தன்னைப்போல் கோவினங்களை மேய்க்கும் பிள்ளைகளுடன் சேர்ந்து அவர்களுக்குத் தலைவனுசி, புன்னை, அசோகு, கதம்பம், மந்தாரை முதலிய மரங்களின்மேலேறி விளையாடியும், யமுனை நதிக்கு ஸ்நானஞ்செய்யவரும் ஸ்திரீகளுடைய துகில்களை எடுத்துக்கொண்டுபோய் மரங்களில் கட்டிவைத்து, அவர்கள் ஆநந்தமாய் நீராடிக் கரையேறி துணிகளைக் காணாமல், அங்கு விளையாடுங் கிருஷ்ணனைக் கண்டுகேட்டால், உங்களுடைய துணிகளை நன்றாய் துவைத்து உலரும் பொருட்டு மரத்தில் கட்டியிருக்கிறேன், மரமேறி எடுத்துக்கொள்ள சக்தியில்லாதவர்கள் எனக்கு கைதூக்கிவணக்கஞ் செய்யுங்கள், குஞ்சம்போடுங்கள், கரணம் போடுங்களென்று கூறிவம்புகள் செய்தும், காளிங்கமடுவில் தண்ணீர் குடிக்கவரும் கோவினங்களைப்பிடித்து விழுங்கிவந்தகாளிங்கன் என்ற பெரியபாம்பின்மீது ஏறிக் குதித்து விளையாடி அதைக்கொன்றும், இப்படியே பல அசாத்தியமான செய்கைகளைச்செய்துவந்தனன்.

இவைகளைக் கேள்வியுற்ற கம்ஸன் பகாசூரன், அகாசூரன் முதலியவர்களை யேவி கிருஷ்ணனைக் கொல்லும்படி பலவித தந்திரங்களைச்செய்தான். அஜாத சத்துருவைக்கொல்ல முடியுமோ?

கிருஷ்ணனும் வாலிபதசையைக் கடந்து யவ்வனதசையை யடையவே, இவனுடைய வேணுகானத்திலும், அழகிலும், புஜபலபராக்கிரமத்திலும் ஈடுபட்டவர்களாகிய ராஜகுலத்து மாதர்கள் யாவரும் மோகித்து இப்பேர்க்

கொத்த புருஷனை அடைதலே இகபரசுகங்களிரண்டிக்கும் மீறியதெனக் கருதி, கிருஷ்ணனேடு கூடி இரவென்றும், பகலென்றும் பாராமல் ராசக்கிரீடை, ஜலக்கிரீடை முதலிய விளையாட்டுகளில் காலங்கழிப்பாராயினர்.

பிருந்தாவனத்திலுள்ள இடையர்கள் வருஷத்திற்கொருதடவை தங்களுரை யடுத்த கோவர்த்தனத்தில் தேவராஜனுகிய இந்திரனை முன்னிட்டுப் பொங்கலிட்டுப் பூஜைசெய்வது வழக்கமாதலால், அவர்கள் அவ்வருஷத்தில் அந்த பூஜையைத்தொடங்கவே, கிருஷ்ணன் அப்பூஜையைத் தனக்கே செய்யும்படி போதிக்க, அவர்களும் கிருஷ்ணனுடைய மகிமையைப் பிரத்தியக்ஷமாய்க் கண்டவர்களாதலால், அதற்கிணங்கி நடத்தவே, தேவேந்திரன்கோபங்கொண்டு அகோரமான மழைபொழியும்படிமேகங்களையேவ,ஸ்ரீகிருஷ்ணன்கோவர்த்தனம் என்ற மலையையே வேரோடு பிடுங்கியெடுத்து மேலேதூக்கிக் குடையாகப் பிடித்துத் தனது கூட்டத்தாரையும் கோவினங்களையும் ஆதரித்த சங்கதியை மதுராபுரிவாசிகள் அதி அற்புதமாகச்சொல்லுகிறுர்கள். கோவர்த்தனகிரியைக் குடையாகப்பிடித்துக் காத்த பாவனையாக எழுதப்பட்டபடம் ஒவ்வொருவீட்டிலும் பிரதான படமாகச் சுவரை அலங்கரிக்கிறது.

கம்சன் இந்தப் பலராமன் கிருஷ்ணன் இவர்களுடைய வரலாறுகளைக்கேள்விப்பட்டு பயந்து, இவர்களை வசுதேவன் குமாரர்களென்று தீர்மானித்து இவர்களைக் கொல்லப் பலவிதமாய் ஊகித்து, கடைசியில் தனது ராஜ்யசேவகத்திற்கு தகுந்த வீரர்கள்வேண்டுமென்பதாகவும் தனது வில்லைவளைத்தவர்களைச்சேனையில் சேர்த்துக்கொண்டு, தகுந்த சம்பளம் கொடுப்பதாகவும் விளம்பரப்படுத்தி மோசக் கருத்தாக அக்ரூரரைக் கொண்டு பலராமனையும் கிருஷ்ணனையும் மதுரைக்கு அழைத்துவந்து வில்லைவளைக்கும்படி யேவ, அவர்களும் வில்லைவளைத்து அருகில்நின்ற துஷ்டர்களைக்கொல்ல கம்சன் கோபங்கொண்டு பலராம கிருஷ்ணர்களின்பேரில் சேனைகளை யேவிப் போர்விளைவிக்க, ஸ்ரீகிருஷ்ணர் சேனைகளை யெல்லாம் அதம் செய்து சிங்காசனத்தின்மீதிருந்த கம்சனைப்பிடித்துக் கீழே தள்ளிக்கொன்று, யமுனைநதியில் பிரேதத்தைப் போட்டு, அவனது மனைவிகளைக்கொண்டு உத்திரகிரியைகளைச் செய்வித்து, சிறையிலிருந்த பழைய அரசனுகிய உக்கிரசேனனுக்குப் பட்டாபிஷேகஞ்செய்து முடிசூட்டி வைத்தான்.

இந்த சங்கதிகளைக் கண்ட கம்சனுடைய மனைவிகள் தங்களுடைய தகப்பனுகிய மகததேசாதிபதியாகிய ஜராசந்தனிடம் முறையிட அவன் உடனே படையெடுத்து வந்து மதுராபுரியைத் தாக்கி உக்கிரசேனனையும் கிருஷ்ணனையும் சண்டைக் கழைக்க, கிருஷ்ணன், அவன் சேனைகளை முறியடித்து, ஜராசந்தனைப்பிடித்துச்சிறையிலடைத்துப் பின்பு கருணையால் விடுதலை செய்யவே, ஜராசந்தன் ஒரு தடவையல்ல இரண்டுதடவையன்று, பதினெட்டுத்தடவை மதுராபுரியைத்தாக்கி, ஒவ்வொருதடவையிலும் ஸ்ரீ கிருஷ்ணரால் தோற்கடிக்கப்பட்டான்.

கடைசியில் ஸ்ரீகிருஷ்ணர் இந்தஜராசந்தன் செய்யும் சளையாத சண்டையையும், அவனுக்கு தன்னால் மரணமுண்டாகக்கூடாதென்கிற எண்ணத்தினுலும் உச்சினி பட்டணத்திற்கு வந்து உபநயனம் செய்துகொண்டு சாந்திபினி என்ற முனிவரிடம் வேதர்கமங்களைக்கற்று கச்சு தேசத்திற் கடுத்த கடலோரத்திலிருக்கும் திவாரகை என்ற பாகத்தில் பட்டணத்தையுண்டாக்கி விதர்ப்பதேசத்து இராஜன் பீஷ்மனுடைய குமாரத்தி ருக்மணியையும் விவாகம் செய்துகொண்டு அனேக மனைவிகளுடனும், பல மக்களுடனும் வாழ்ந்துகொண்டிருந்தனர். இச்சமயத்தில் ஜராசந்தன் மதுரையையடைந்து உக்கிரசேனன் கட்டிவைத்திருக்கிற கூடகோபுரங்களையும் கோவில்களையும் இடித்து பட்டணத்தைப் பாழாக்கினன்.

இப்படியிருக்கையில் பாண்டவர்களுக்குதவியாக மகததேசம் சென்று பீமனால்ஜராசந்தனைக் கொன்று பாரதயுத்தம் நேர—பூபாரத்தையே தீர்க்க எண்ணங்கொண்டு பலதுஷ்டாத்மாக்களை யொழித்து துவாரகையிலேயே யிருந்து விட்டார். பிறகு மதுராபுரிக்குத் திரும்பிவரவில்லை.

(இன்னும் வரும்.)

T. C. வெங்கடரமணய்யர்.



## A PLEA FOR THE STUDY OF OUR MOTHER-TONGUE.

## நமது தாய் பாஷையை நன்றாகக் கற்கவேண்டும்.

பாஷை மனிதன் எண்ணத்தை வெளிப்படுத்துவதற்கானதோர் இனிய வழியாம். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்பதற்குக் கணக்கும் பாஷையும் இருகண்களையொக்குமென்பர். ஆனால் மனத்திலுதிக்கும் எண்ணமும், அதைக் குறிப்பிக்கும் எழுத்தும், அகமும் புறமும்போல் ஒத்திருக்கவேண்டியதால் இரண்டும் ஒரே நோக்கமுள்ளதுபற்றி, "கண்ணிரண்டும் ஒன்றையே நோக்கிறான் காண்" என்றபடி, இரண்டும் ஒரு நோக்கங்கொண்டது என்னும் பொருள்படச் சொன்னதுமாகும். உள்ளத்திலுதிக்குமெண்ணத்தைக்கள்ளமின்றி வெளியிடுவார் உத்தம புருஷராவர். மனோ வாக்கு காயம் என்கிற மூன்று கரணங்களில் மனமும் வாக்கும் பொருந்தினால், காயமும் கூடப்பொருந்தும் தன்மைவாய்ந்ததா யிருக்கிறது. இது தேஹமனோதர்மவிதி. ஆகையால் மனமும்வாக்கும் பொருந்தப்பழகவேண்டும். "கற்றதோர் கல்வியும் நாப்பழக்கம்" என்றார் ஔவையார். மனது சங்கல்பிப்பதற்கேற்க நா உரைக்கப் பழகுமாயின், அதுவே ஸத்யவிருதமிருக்கலாம். ஆதலால், குழந்தைமுதல் நாம் பழகிவரும் பாஷையைக் கற்பது யாவர்க்கும் அவசியம். தமிழின் பெருமை வேறெம்மொழியினும் குறைவுபட்டதில்லை. "மனம் ஒரு வழிப்பட்டது மந்திரம்." ஒருவழிப்பட்ட மனத்தின் சங்கல்பத்தை யுள்ளபடி யுரைப்பது பரைவாக்கு. இந்தப்பரை வாக்கு அசரீரி வாக்காதலால், இஃதை அறிவால் மட்டுமறியலாமேயன்றி, பொறிபுலனால் புகுந்தறிவது கூடாது. இந்தப் பரைவாக்குப் பச்யந்தி யென்னும் பேதமுறுங்கால், ஊமையன் பேச்சுப்போல் உள்ளமுணருந்தன்மையதாம். இஃது பின்னும் பரிணமித்துவளர்ந்து மத்தியமையென்னும் மனநிறை வாக்காகுங்கால் அதை மனதால் அறியலாம். மேற்றிசையார் "Thought-Reading" என்றுசொல்லி நினைத்ததை யுரைப்பதும், நம்மவர்கள் குறி சொல்வதாகச் சொல்லுதும் இந்த மத்தியமை வாக்கின் மஹிமைதான். இஃதும் விரிந்து வாக்கால் உச்சரிக்கப்பட்டு வெளிவருவது வைகரி வாக்காம். ஆத்மசங்கல்பம் படிப்படியாக மேலேறி வெளிவந்தால் அது கட்டாயம் பலிக்கும். ஏனென்றால் ஆத்மா இயல்பாகவே முச்சக்தி வாய்ந்துளது. இச்சாசக்தி சங்கல்ப மாத்திரத்தால் காரியத்தை முடிக்கும்; ஞானசக்தி தத்துவார்த்தத்தை யுணர்ந்து, தத்துவமாத்திரமாக நின்று காரியத்தைமுடிக்கும். கிரியாசக்தி காரணகாரியமறிந்து கிரியா மூலமாய்க் காரியத்தை முடிக்கும். இம்மூன்றும் ஸ்தூல, சூக்ஷ்ம, காரண தேகங்களை உபாதியாகக்கொண்டு தத்தம் சக்தியைக்காட்டும். இம்மூன்றும் ஒத்திருந்தால் அதுவே பூரணசக்தி, அவர்கள் வல்லமைக்குஅளவில்லை. அந்தவல்லமையுள்ள வாக்கு எதுவானாலும் அது பாஷையில் பூரணமானதென்றுசொல்லத்தகும். அப்படிப்பட்ட பூரணத்துவம் தமிழுக்குண்டு. ஆகையால் தான் அதுஎந்தப்பாஷைக்கும் இரண்டாவதானதல்லவென்று சொல்லப்படுகிறது.

"தொண்டர் நாதனைத் தூதிடவிட்டதும், முதலையுண்டபாலனை யழைத்ததும், எலும்பு

பெண்ணுருவாக் கண்டதும் (திருமயிலை 63-வர் உற்வச் சிறப்பின் ஐதிகம்இதுவே), மறைக்கதவினைத் திறந்ததும், தண்தமிழ்ச்சொலென்றால்,'' அதன்மஹிமைக்குக் குறைவுண்டோவென்று அதன் பெருமையைக் கொண்டாடுவோர் வீணரல்லர். தமிழின்சிறப்புஅபாரமானதே. மதுரையில் வீற்றிருந்த முதற் சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கம்ஆகியவித்வத்சங்கங்கள் நாவில் வழங்கிப்பெருமைபெற்றது தமிழ் என்றால் அதன் வித்வத்விசேஷத்துக்கும் குறைவில்லை. அப்பேர்ப்பட்ட தமிழ்ப்பாஷையை இக்காலத்து யூனிவர்ஸிடிசங்கத்தார் மேற்பார்வையில் நடக்கும் வித்தையில் அலக்ஷியமாக விட்டு வருவது அழகாயில்லை. பரீக்ஷையில் நிறைய மார்க்கு வாங்கவேண்டுமென்று சொல்வதில் பிரயோசனமில்லை. தமிழில்நினைத்துத் தமிழிலுதிக்கும்எண்ணத்தை தமிழில் தெளியக்கூறும் சக்திவாய்ந்தாலன்றி தமிழ்ப் படிப்பு படிப்பாகமாட்டாது. இனி இத் தாய்பாஷையை நாம் நன்குபயிலவேண்டியதைப்பற்றித் தமிழபிமானியொருவர் நமக்கெழுதியுள்ளதின் கருத்தைக் கீழேவெளியிடுவோம்.

“நம்மை ஈன்றதுந் தமிழ், வளர்த்ததுந் தமிழ், தாலாட்டிச் சீராட்டி யுறங்கவைத்ததுந் தமிழ். நம் மழலைச் சொல்லால் நம்மைப்பெற்றோரையகமகிழச்செய்ததுந் தமிழ், இளமைப் பருவத்தில் பேசத்துவக்கும்போது முந்தியுச்சரித்ததுந் தமிழ். நம் தாயும் தந்தையும் நமக்குப் பாலோடும் புகட்டினதுந் தமிழ். அன்னை, பிதா, குரு முதலானவர்கள் முதலில் நமக்குபதேசித்ததுந் தமிழ். இப்போது நமது மாதாபிதாக்கள், பந்து ஜனங்கள் மித்திரர்கள்முதலிய யாவரும் பேசுகிற பாஷையுந் தமிழ். நம்வீட்டுப்பாஷையுந் தமிழ் நம்நாட்டுப் பாஷையுந் தமிழ். இத்தகைய சிறப்புவாய்ந்த நந்தமிழ்ப்பாஷையை விட்டுவிட்டு ஏனைய பாஷைகளைக்கற்கிறவர்கள் உறவினர்களைக் கைநழுவவிட்டுவிட்டு அந்நியர்களிடம் நட்புக்கொள்ளுகிறவர்களுக்கொப்பாகிறார்கள். ஆபத்துக் காலத்திலுறவினர்கள் உதவுவார்களேயல்லாமல் அந்நியர்கள்எவ்வாறு உதவார்களோ அவ்வாறே நமது சொந்தபாஷை யுதவுமேயல்லாது ஏனைய பாஷைகளுதவா. சமஸ்கிருதமும் அதிக சிறப்பும், அழகும், அலங்காரமும் வாய்ந்த பாஷை யெனக் கூற ஐயமில்லை. காலமுள்ளவர்கள் சொந்தபாஷையுடன் ஏனைய பாஷைகளைக் கற்கின் அதிக நன்மைதான். சொந்த பாஷையை ஐயந்திரிபறக் கற்காமல் மற்றைய பாஷைகளிலே கண்ணுங்கருத்துமாயிருந்து காலத்தை யெல்லாம் போக்குவது பொருந்தா விஷயமென்றே கூறத்துணிவோம்.

“இங்கிலீஷ், பிரஞ்சு முதலிய ராஜபாஷைகளைக் கற்கவேண்டாமெனக் கூற நாம் முன்வரவில்லை. ஏனெனில், நாம் நடந்துகொள்ள வேண்டிய சட்டதிட்டங்களும் ஏனைய முறைமைகளும் ராஜபாஷைகளிலேயே இருக்கின்றமையான் அப்பாஷைகளை நாம் கற்காவிடின் அந்த ராஜாங்கத்திலிருந்து காலந்தள்ளுவது சாத்தியமானகாரியமல்ல. அல்லாமலும்அரிய பெரிய விஷயங்களடங்கிய அநேக கிரந்தங்கள் அப்பாஷைகளிலேயே இருக்கின்றன. நாம் அவைகளைக் கற்குந்தோறும் நம்மறிவு விசாலமாகுமென்பது திண்ணம். ஆயின் மாதா வயிறெறிய மகேசுவரபூஜை செய்வதையொப்பச் சொந்தபாஷையை முற்றிலுமே விட்டுவிட்டு அப்பாஷைகளைமட்டும் கற்பது தர்மமா? சொந்தபாஷைகளிற் கையெழுத்து கூடப்பிழையின்றிப்போட சக்தியற்றவர்களாயிருக்கின்றனர் அநேகர். சிலர் தமிழ்ப்பாஷையைக் கற்காமலிருப்பது கௌரவமென்றும், தமிழ் மொழியான் வார்த்தையாடின் அவமானமென்றும் கருதுகின்றனர். இவர்களையாம் என்னென்றுரைப்பேம்? சுயபாஷாஞானம் எவ்வளவுக்கெவ்வளவு குறைவாகவிருக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு ராஜபாஷைகளில் விற்பன்னர்களாயிருக்கிறார்களென ஜனங்கள் கருதுவார்களென்றே அலட்சியஞ்செய்

கிறதாகக் கருதுகிறோம். அன்னோர் தமிழ்ப் புத்தகங்களைக் கையிலெடுப்பதென்றால் நல்ல பாம்பிருக்கும் புற்றுக்குள் கைவிடுவதுபோலவும், தமிழ்ப்பாஷையில் வார்த்தையாடுவதென்றால் வேப்பிலைக்கிஷாயமுண்பதுபோலவும், தமிழ் வார்த்தைகளைக்கேட்பதென்றால் அளிந்த புண்ணிலம்புருவியதுபோலவும், எண்ணுகின்றனர். தமிழ்ப்பாஷையிலேயே பேச சமயம் வாய்க்கின் முக்காற்பங்கு இங்கிலீஷும் காற்பங்கு தமிழுமாகக் கலந்து மொழிகின்றனர். இத்தகையோருக்குத் தேசாபிமானமும் பாஷாபிமானமுமில்லையெனக்கூற ஆட்சேபனையுண்டோ? இங்கிலீஷ்காரர் முதலிய ஐரோப்பியர் தங்கள் தங்கள் சொந்தபாஷைகளில் எவ்வளவோ கவனஞ்செலுத்தி வருகிறார்களென்பது நமது வித்தியார்த்திகளே நன்குணர்வார்கள். கல்விச்சாலையில் கல்வி பயிலும் மாணாக்கர்களிலநேகர் தமிழ்ப் பாடத்திற்காக வரையறுக்கப் பட்ட நேரத்தில் அப்பாஷையை யோதாது அசட்டைசெய்து வெளியேபோய் உல்லாசமாக காலங்கழிக்கின்றனர்." ஸ்வபாஷாபிவிர்த்தியைப்பற்றி யூனிவர்ஸிடி சங்கத்தார் சிரத்தைக் கொள்ளவேண்டியது அவசியமே.

பின்னுந் தமிழின் மகிமையை யெடுத்துரைப்பான் நமது நிருபர் பின்வருமாறு எழுதுகின்றார்:—

"இராஜசபையின் கண்ணே, சமஸ்தான வித்துவானின் செருக்கினால் காளமேகப்புலவருக்கு ஆசனங்கொடாதிருப்பதைநோக்கிய விப்புலவர் நின்ற நிலையிலேயே சாரதையைத் தியானித்து அவள்பேரில் வெண்பாவினால் ஒரு சரஸ்வதிமாலை பாடினார். இருபத்தொன்பதாம் பாட்டுப்பாடி முடிக்கவே அரசன் வீற்றிருந்த சிங்காதனந் தெய்வாதீனமாக நீண்டு இடங்கொடுக்க வதிலே இவர் பலரும் அதிசயக்க வேறியமர்ந்தனர். உடனே,

"வெள்ளைக்கலையுடுத்தி வெள்ளைப்பணிபூண்டு
வெள்ளைக்கமலத்துவீற்றிருப்பாள்—வெள்ளை
அரியா சனத்தி லரசனோ டென்னைச்
சரியா சனத்துவைத்த தாய்."

என்று முப்பதாஞ் செய்யுளைப் பாடி முடித்தனர். பண்டைக் காலத்தில் தமிழ்ப்புலவர்கள் அடைந்த கீர்த்திக்கும் புகழுக்கு மளவில் படிக்காசுத்தம்பிரான் பாடுஞ்செய்யுளுக்குச் சிவபெருமானே மகிழ்ந்து அவருக்கு வேண்டிய பொருள் கொடுத்துவந்தாரென்றால் இவரின் பெருமையை இதை வாசிக்கும் வித்தியார்த்திகளும் கனவான்களும் அறிந்து கொள்ளட்டும். தமிழ் நூற்களையே ஏறெடுத்துப் பாராதவர்கள் அவைகளுக்கு எவ்வாறு குறைகூற வியலும்? சங்கப்பலகையே முழம்வளர்ந்து இடங்கொடுத்த திருவள்ளுவரின் திருக்குறளை யொப்ப நூல் எப்பாஷையினும் இல்லையென்றே கூறத்துணிவோம். இந்நூல் இக்காலத்தில் ஆங்கிலம் ப்ரெஞ்சு முதலிய ஐரோப்பிய பாஷைகளிலும், தெலுங்கு முதலிய இந்திய பாஷைகளிலும் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது. இதன் அளவிடாப்புகழை அன்னோர் அறிவார்களா? கம்பசூத்திரமென ஜனங்கள் மெச்சிப் புகழ்கின்ற கம்பன் வாக்கைக் கனவிலுஞ் செவிமடுத் திருப்பார்களா? வைகையாற்றின் நீரோட்டத்தையெதிர்த்துச் சென்ற ஏட்டிலுள்ள செய்யுளடங்கிய நாலடியாரைக் கண்ணாரக் கண்டிருப்பார்களா? ஔவையாரின் நீதி நூலை நன்கு அறிவார்களா? சிவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி முதலிய பஞ்ச காவியங்களின் பெயரைத்தான் தெரிந்திருப்பார்களா? அகநானூறு, புறநானூறு, பத்துப்பாட்டு, பதிற்றுப்பத்து முதலிய நூல்களிருக்கின்றனவென்றாகிலும் அறிந்திருப்பார்களா? அகத்தியத்தின் வழிநூலாகிய 'தொல்காப்பியம்' எனும் தமிழ் இலக்கணம் எனு நூலுண்டென் றுணர்ந்திருப்பார்களா?

இன்னும் எண்ணிலாத் தமிழ்ப் புலவர்களுடைய பிரபந்தங்களை இவர்கள் எக்காலத்திலும் கண்டிரார்கள்.

“ஆகையான் நம்நாட்டு வித்தியார்த்திகள் தமிழ் மொழியைச் சிறிதேனும் இகழாமல் ஒழுங்காயும் முறையாயுங் கற்றுவரல்வேண்டுமென்பதே நங்கொள்கை. தமிழ் எனும் பதத்திற்கு இனிமையெனப்பொருள் உள்ளதால், இனிமையென்னும் பதத்தைச் செவிமடுக்க நமக்கு இன்பமுண்டாகின்றமையான் இப்பொருளைத் தாங்கிய இப்பாஷையை நாம் பொன்னேபோல் போற்ற வேண்டாமா?”



## “FREE FROM BONDS”

(THE AUTOBIOGRAPHY OF A TALUQGUMASTAH)

## * அவிழ்த்துவிட்டகழுதை.

(ஒரு தாலுக்கா குமஸ்தாவின் சரித்திரம்.)

நான் கலியாணிக்கு எழுதின கடிதம் இது:— “என் அருமைக்கலியாணிச்கு அநேக ஆசீர்வாதம். உன்கடிதம் எனக்குச் சந்தோஷம் கொடுத்ததேயொழிய என்னுடைய சித்திரம் எனக்குச் சந்தோஷம் கொடுக்கவில்லை. நான் இப்பொழுது எங்கிருந்து எழுதுகிறேன் தெரியுமா? ஆற்றங்கரையில் இருக்கிறேன். சுற்றியிருக்கும் மரங்களும் பக்ஷிகளும் இந்தப் பைத்தியகாரன் இந்த வேளையில் இந்த இடத்தில் என்னசெய்கிறான் என்று ஆச்சரியப்படுகின்றன. காற்றுங்கூட இவன் என்ன செய்கிறானென்று கவனித்துக்கொண்டு நிச்சப்தமாயிருக்கிறது. என் மனதிலிருக்கும் வருத்தத்தை உன்னிடத்திலும், உனக்குப்பிறகு இந்தக்காவேரியினிடத்திலும்தான் வாய் திறந்து சொல்லுகிறேன். இரவில் தூக்கம் வருகிறதில்லை. ஜனங்களுடைய கூட்டத்தில் போகப் பிரியமில்லை. எதைநினைத்தாலும் பயமும் ஏக்கமுமாயிருக்கிறது. உனக்குக் கலியாணம் வரப்போகிறதாயும் அதற்கு நான்க் வரவேண்டுமென்றும் மணியன் எழுதியிருக்கிறான். உனக்கு வரப்போகிற புருஷன் பி.ஏ. பரீக்ஷைதேறி இருக்கிறாராமே. நீ நல்ல அதிர்ஷ்டசாலி! நீ தீர்க்காயுசுடையவளாய் துக்கமேயறியாதவளாய் குழந்தைமனம் மாறாதவளாயிருக்கவேண்டுமென்று கடவுளைப்பிரார்த்திக்கிறேன். நான் இக்கடிதத்தில் ஏதாவது அசட்டுத்தனமாய் உளறியிருந்தால் இதைப் பார்த்தவுடன்கிழித்து விடுவாயானால் என் மனதுக்கு திருப்தியாயிருக்கும். உன்னைக்கலியாணத்தில் யதார்த்தத்தில் நித்திய கலியாணியாய் விளங்கப்பார்க்க விரும்புகிறேன்.” என் வேண்டுகோளுக்கு விரோதமாகக் கலியாணி இக்கடிதத்தை மேற்சொன்ன படத்திற்குப் பின்புறத்தில் காப்பாற்றி வைத்திருக்கிறாள். இப்பொழுது என்னை எதற்காவது பரிஹாஸம் செய்யவேண்டுமானால் அக்கடிதத்தை எடுத்துக்காட்டுவாள். உடனே எனக்குவெட்கமாகிவிடும். கலியாணியின் புருஷனை நேரில்பார்த்தபொழுது எனக்குஉண்டான திருப்தியால் என் துக்கம் கொஞ்சகாலம் தலையெடுக்காமல் ஒருவாறு மறைந்திருந்தது. கலியாணமான பிறகு கலியாணி எனக்குக் கடிதம் எழுதுவதை நிறுத்திவிட்டாள். அந்தக்கலியாணத்தில் மணியனைப் பார்த்தேன். குடித்தனத்துக்கேற்ற பிள்ளையாய் நிலங்கள் சாகுபடியைக் கவனித்துக்கொண்டு பெட்டி வண்டி ஓட்டிக்கொண்டும் உயர்ந்த ஜாதிமாடுகளை வண்டியில் பழக்கிக்கொண்டுமிருக்கிறான். வீட்டுவேலைக்காரர்களுக்கும் குடியானவர்களுக்கும் இவனைக்கண்டால் பயம். அவன் தகப்பனார்கூட அவனைக்கேளாமல் ஒரு காரியமும் செய்யமாட்டார். அவனைப்பார்த்து “அப்பா, உன்பாடு சௌக்கியம்” என்று சற்றுப் பொறாமைப் பட்டவன்போல் சொன்னேன். அதற்கவன் “இந்தத்தொழிலுக்கு ஒருநாளுங் குறைவில்லை. ஒருபாபமுமில்லை. மேழிச்செல்வங் கோழைபடாது. வேறென்ன செய்தாலும் செய்யாவிட்டாலும் மனிதனாய்ப்பிறந்தவன் சாப்பிட்டே தீரவேண்டும். அதற்கு வே

*தன்னையறிந்து தன்வழியில் பிரவேசிக்கும்மனோ தர்மசக்தி தடையறியாது.

ண்டியதைச் செய்தேதீரவேண்டும். நான் என் ஆள்களை எப்படி வேலைவாங்குகிறேன் தெரியுமா? அவன் ஒருவட்டு வைக்கோலைத் தூக்க முடியாதென்று சொன்னால் உடனே நான் அதைத்தூக்கி அவனை அவமானப் படுத்துவேன். அப்புறம் அவன்நாய்போல் வேலைசெய்வான். நான் ஆள்களோடு கூட அரிவாள் பிடித்து அறுப்பேன். எனக்கு அது வேடிக்கையாயிருக்கும் அவர்கள் சாமிசாமி நீங்கள் ஏன் வெய்யிலில் கஷ்டப்படுகிறீர்கள்? எங்களுக்குத்தான் தலையெழுத்து. நீங்கள்கரையேறுங்கள்'' என்று என்னை வேண்டிக்கொள்வார்கள், என்று முடித்தான்.



## "BRIDEGROOM—HUNTING"

## OR, THE LOST IDEAL.

## "மாப்பிள்ளை தேடல்"

அல்லது

## காணுமற்போன கட்டழகன்.

(ஸ்ரீஸத்யானந்த சாந்த சர்மா எழுதியது)

### II. திருமண நோக்கம்.

---

"மணமெனப்படுவது மங்களாகாரமே."*

"விவாஹம்", ஆண்பிள்ளைகளுக்கு பிரஹ்மசரியம்போல் பெண்களுக்கு இந்திரிய நிக்ரஹத்துக்குரியதோர் பிரஹ்மசரியத்தையொத்த ஆத்மஸம்ஸ்காரமாம் என்று சொல்லி முதற்பாகத்தை முடித்தோம். பிரஹ்மசரியம் என்றால் என்ன? பிரஹ்மத்தை ஆச்ரயித்திருப்பது பிரஹ்மசரியம். இந்திரியநிக்ரகம் செய்யாமல் ஆத்மாவை யாச்ரயித்திருப்பது கூடாமையால் சாதனையின் சிறப்பு சாதகத்தின்மேலேற்றப்பெற்று பிரஹ்மசரியமென்பது இந்திரியநிக்ரகத்திற்கே சொல்லப்படுவதாயிற்று. இந்திரியநிக்ரகம் செய்தவனெல்லாம் பிரஹ்மத்தை ஆச்ரயித்திருப்பானென்று அருத்தமல்ல. இந்திரியங்களைவிட்டு நின்றால் அறிவு அந்தகாரத்தில் ஒடுங்கும். அதுவும் கடந்து அருள்வெளிப்பட்டாரே ஆத்மானுசந்தானம் செய்யக்கூடியவராவர். பண்டாசுரனுடைய பலத்தை யார் அறியார். ஆயினும் அவன் அசுரனே. பத்மாசுரனுடைய தவத்தையார் அறியார். ஆயினும் அவன் அசுரனே. அசுரபாவம் இந்திரிய நிக்ரகத்தால் விட்டுப்போகாது. ஆத்மானுசந்தானத்தாலேயே அதுநீங்கும். ஆத்மானுசந்தானம் அருள்வெளிப்பட்டார்க்கே அமையும். இது விஷயமாய் ஒருகதையுண்டு. முன்னொருகாலத்தில் ரிஷிகள் தபஸிகள் எல்லாரும்கூடி பிரஹ்மசரிய விரதத்தில் சிறந்தவர் யார் என்று பந்தயம் போட்டுக்கொண்டார்கள். கலியாணமானவர் ஆகாதவர் எல்லாரும் தானே பிரஹ்மசரிய விருதத்திற் சிறந்தவனென்று சொல்லிக்கொள்ள, இவர்களெல்லாம் வாது செய்துக்கொண்டு ஸ்ரீ கிருஷ்ண பகவானிடம் மத்தியஸ்தத்திற்குப் போனார்கள்.

கார்மேகவண்ணன்பார்த்தான். இத்தனை தபசிகள் ரிஷிகள் முனிகள் குழாத்தில் இவர்களோடு வாதாடிச் செயிப்பது கூடாதென்பதை ஒருநொடியில் கண்டான். "வாயாலொன்றுமாவதில்லை'' யென்பதினுண்மையை யுணர்ந்த கண்ணன் ஒரு யுக்தி செய்தான். அது என்னவெனில்:—

இங்கே வந்துள்ள வாதுக்காரர்களெல்லாரும் ஒரு சபதம் செய்துகொள்ளவேண்டியது. அது என்னவெனில், "நான் ஸத்யமாகவே பிரஹ்மசரிய விருதம்பூண்டவன்: இந்த விருதபங்கம் எனக்குண்டாயிருக்குமேல்என் தலை யற்று விழக்கடவது'' என்று சபதம் செய்துகொள்ளவேண்டுமென்று சொன்னார். ஒவ்வொருவரும் அப்படியே செய்துகொண்

* மங்களாகாரமாம் - சுபஸ்வரூபமாவதுவேமணமெனப்படுவது என்பது பொருள்.

டார்கள். ஸ்ரீ கிருஷ்ணன் பார்த்தான். கையிலுள்ள சக்ரத்தை ஏவி இவர்கள் செய்துகொண்ட சபதப்படி யாருடைய வாக்குத்திரிகரண சுத்தியாய்ப் பொருந்தி யிருக்கவில்லையோ அவர்கள் தலையை யறுத்து வீழ்த்துக என்றுவிட்டார். சக்கரம் அங்கிருந்து சபதம் செய்துகொண்டவர்கள் ஒவ்வொருவரையும் விடாது துரத்திப்பிடிக்க அவர்கள் ஓடியொளித்து இல்லாத சமர்த்தெல்லாம் பண்ணியும் அதற்குத் தப்பமுடியாமல் ஓடோடியும் வந்து ஸ்ரீகிருஷ்ணன் காலில் விழுந்து நான் உண்மையான பிரமச்சரிய மனுஷ்டித்தவனல்லவென்று உண்மையை ஒப்புக்கொண்டு, சத்தியத்தைச் சொன்னோம் தலை தப்பவேண்டுமென்று கேட்டுக்கொண்டார்கள். சபதம் பொய்யாகி வாக்கிழந்தவர்களை வீணர்களென்றுவிட்டொழிக வென்னவும் சக்கரம் கரகரவென்று ஆகாசத்தில் சுழன்றுகொண்டு நின்றது. சக்கரத்தின் வேகம் அடங்கவேண்டியதின் பொருட்டும் உண்மை வெளியாகும்பொருட்டும், அங்கிருந்த தபசிகள் குழாமெல்லாம் ஸ்ரீ கிருஷ்ணனைப் பணிந்து பின் யார்தான் உண்மையான பிரஹ்மசரியனோ வென்று வினவ, கிருஷ்ணன் பதினாயிரத்துச் சொச்சம் பெண்டீர்களை யனுபவித்தவனாயினும் அவன் "நானே உண்மையான பிரஹ்மசரியன். இல்லையேல் என் தலையும் அற்று விழுக" வென்று சபதம் கூறி நின்றான். உடனே ஆகாசத்தில் சுழன்றுகொண்டிருந்த சக்கிரம் அவனை நோக்கி அதிவேகமாய்ச் சுழன்று வந்து அவன் காலடியில் அதன் வேகமெல்லாம் ஒடுங்கி அடங்க் ஓய்ந்து விழுந்தது. இதைப்பார்த்து எல்லாரும் ஆச்சரியப் பட்டார்கள். ஆகையால் பிரஹ்மசரியமென்பது ஸர்வாந்தர்யாமியாயும் ஸர்வவியாபகராயுமிருக்கிற பிரஹ்மத்தை எக்காலத்தும் எச்செய்கையிலும் இமைப்பொழுதும் மறக்காதிருத்தற்கே சொல்லற்பாலதாம். "அறிவேபிரஹ்ம மென்றாதுது சங்கே" யென்றபடி அறிவேபிரஹ்மமாக, போகத்திலும் கர்த்திருத்துவ போக்திருத்துவசி[illegible]து யற்று நிற்க, அதனால் அறிவு மழுங்கா[illegible]ருப்பதே பிரஹ்மசரியமாம். அறிவு சுத்தவெளியானால், அருள் என்பது ஒளி; மாயை அல்லது இருள் என்பது அறியாமை மூடம். மருள் அல்லது மயக்கம் என்பது ஜீவன். அருள்வெளியிலுள்ளவனை இருளும் மருளும் நெருங்கிப்பீடிக்காது. ஆகையால் அருட்பேறு பெறுதலே பிரஹ்மசரிய விருதத்தின் பூரணமாம். பிரஹ்மசரியம் நிலைத்து விட்டால் பிரஹ்மவித்தாய் விடுகிறான். பிரஹ்மசரியம் நிலைக்காது நிலைதடுமாறினால் அப்பொழுது அவ்விருதத்தைப் பூர்த்தி செய்துகொள்ளுமாறு இல்லறம்நடத்தக்கருதி விவாஹம்செய்கிறான். இல்லறத்துக்கும் காமவிகாரத்துக்கும்வெகுதூரம். "Thou shalt not look upan a woman with last" என்று யேசுகிறிஸ்து சொன்னது பிரஹ்மசரியவிருதத்தின் உட்கருத்தை வெளியிட்டதன்றி வேறல்ல. புருஷன் தர்மபத்நியையும் காமக்கண்ணால் பார்க்கலாகாது. மிருகப்பிராயமான மனிதனே காமாதுரனாகிறான். மனிதப்பிராயமானவன் காமநுகர்வது காமவசப்பட்டுக் காமாதுரனாகவில்லை. ஆனால் காமநுகர்ச்சியால் காமத்தின் ஸ்வரூபத்தை யறிந்து அதையறிந்த அறிவால் அக்காமத்தைச் செயித்து அதன் கட்டுங் கடந்தவனாகவேயாம். திருமூலர் திருமந்திரோபதேசத்தில்

"அஞ்சு மடக்கடக் கென்பர் அறிவிலார்
அஞ்சு மடக்கு மமரும் அங்கில்லை
அஞ்சு மடக்கில் அசேதனமா மென்றிட்டு
அஞ்சு மடக்கா அறிவறிந் தேனே."

வென்றுசொல்லியிருக்கிறார். "அஞ்சு மடக்கா அறிவுஇல்லறத்திலிருந்தன்றி மற்றப்படி அறியக்கூடியதல்ல. ஆசாரிய மூர்த்தமான ஸ்ரீமத் பகவத் பாத சங்கராசாரியரவர்களும் பரகாயப் பிரவேசம் செய்து காமநுகர்ச்சி கண்டபின்னரே காமத்தின் இயல்பைக்கண்டறிந்து பாரதீ தேவியை வாதில் வென்று காமகோடிபீடமென்று சொல்லும் ஸாரதாபீடத்தை ஸ்

தாபிக்கலானார். அறிவு பூரணமாக சுருதி யுக்தி, அனுபவமென மூன்று பிரமாணங்களாலும் அதை யறியவேண்டும். சுருதிக்கு ஒத்துவராத அனுபவம் ஆரோப அபவாத குற்றங்களுக்கிலக்காகும். யுக்திக்கு ஒத்துவராத அனுபவம் "எட்டிச்சுரைக்காய் கறிக்குதவாது" என்று சொல்கிறபடி சமயத்தில் மோசம் செய்யும். அப்படியே அனுபவமில்லாத சுருதி யுக்தி ஞானம் காரியத்துக்குதவாது கானற்சலம்போல் மயக்கத்தைக் கொடுக்கும். எதையும் அறிந்தனுபவித்துப்பார்த்து அதன் உண்மையறிந்தாலன்றி விரக்தி பற்றியதை விட்டொழித்தல் கூடாது "களவும் கற்று மற" என்று சொல்லிய ஆப்தவாக்கியத்தின் உள்ளக் கருத்து இதுவேயாம். ஆகையால் விவாஹம் உயர்குலப் பெண்களுக்கு இந்திரிய நிக்ரஹத்துக்குரியதோர் ஆத்ம ஸம்ஸ்காரமென்றதில் முன்னுக்குப் பின் முரணான அருத்தம் ஒன்றுமில்லையென்று இதைவாசிப்போர் இப்பொழுது உணர்ந்து கொள்ளக்கூடும். இது நிற்க.

இனி திருமணம் என்றால் என்ன? அதன் நோக்கம் என்ன? என்பதைப்பற்றி விசாரிக்கப் புகுவாம். "மணமெனப்படுவது மங்களாகாரம்" என்றதையெடுத்துக்கொண்டு அதன் அருத்தம் என்னவென்றுபார்க்கில், திருமணத்தின்ஸ்வபாவம் விளங்கும். மணம் என்றால் வாசனை, சுபவாசனைக்கே முக்கியமாகச் சொல்கிறது. திருமணம் என்றால், சுபவாசனையையொட்டிவரும் புனிதஸம்ஸ்காரமாம் வாசனையைக்கிரஹித்தல் அல்லது சேர்ந்தனுபவித்தல் என்பதுபொருளாம். ஆத்மாவுக்கு ஆண் என்றும் பெண் என்றும் விகாரமில்லை. அது நிர்விகாரமானது. ஆனால் அது தோன்றும்பொழுது ஆண், பெண், அலியென திரிவிகாரமாகத்தோன்றுகிறது. ஆணும்பெண்ணுமற்றதாய் ஆண்பெண்ணிரண்டுக்கும் பொதுவாய் இரண்டின் குணமுமற்று விளங்குவது அலியாதலால், அதைத்தள்ளி ஆண், பெண் என்கிற இரண்டின்பால் வேற்றுமையைமட்டும் எடுத்துக்கொண்டு பார்த்தால், இவ்விரண்டும் ஒன்றையொன்று ஆச்ரயித்திருப்பது விளங்கும். ஆணில்லாமற் பெண்ணில்லை; பெண்ணில்லாமல் ஆணில்லை. அப்படியிருக்க ஆணும் பெண்ணும் உற்பத்தியானது எப்படி? பிரம்மா சிருஷ்டிக்குங்காலத்தில் அவனுடையசிருஷ்டிகளெல்லாம் பிரஜாவிருத்தியையுண்டுபண்ணாதிருக்கக்கண்டு, கோபத்தினால் ஆக்ரோஷித்து மறுபடியும் சிருஷ்டி செய்ய யத்தனித்தபொழுது அவன் புருவமத்தியிலிருந்துண்டான கோபாக்னியிலிருந்து ஆண்பாதி பெண்பாதியான உருவமைந்த நீலலோசனனைப் பெற்றானென்று சொல்லப்பட்டிருக்கிறது. ரஜதமோகுணங்கள் சேர்ந்துற்பவித்த இந்த நீலலோசனன், பரமேஷ்டியின் ஆக்ஞைப்படி, ஆண், பெண் இரண்டுங்கூடிய தன்னுருவத்தை ஆண் வேறு பெண் வேறாகப் பிரித்தான். ஆண் பாகத்திலிருந்து ஏகாதசருத்திரரென்று சொல்லும், தசேந்திரியங்களும் மனசும்சேர்ந்த 11 இந்திரியங்கள் வலுத்த ஆண் சிருஷ்டியும்; வேறு பிரிக்கப்பட்ட பெண் பாகத்திலிருந்து புவன போகாதி போக்கியாருகமான பெண்ரூப பிராகிருத சிருஷ்டியும் உண்டாக, இவ்விரண்டின் சேர்க்கையால்பிரஜாவிருத்தியுண்டாகத்தலைப்பட்டது. ஆகையால் பெண்ரூப சிருஷ்டியான போக்கியாருகமான வஸ்துவைப்பெற்றவன், அதைப் போகித்துப்வனான புருஷனைத்தேடி அவனை உடமைக்காரனாகவெண்ணி அவன் வசம் கன்னிகையை ஒப்புவிக்கவேண்டும். ஆகையால்திருமணநோக்கம் ஜீவசிருஷ்டியின் மர்மமறிந்து, ஜீவ மயக்கம் தீர்ந்து சிவயோகம்துய்க்கவென்பது சொல்லாமே அமையும். சிவம்என்றால் சுபம். மங்களம் என்பது பொருள். மங்களாகாரமாயிருப்பது சிவஸ்வரூபம். தேஹோஹ பாவமுடையஜீவன் பிரஹ்மசரிய ஆச்ரமதீக்ஷையால் இந்திரியநிக்ரஹம் செய்து பிரஜ்ஞானம் பிரஹ்மம் என்னும் மஹாவாக்கியத்தின் உண்மையையுணர்ந்து, அறிவுமயமாயிருக்கும்இந்தப்

பிரபஞ்சத்தில் தாண்டியார்? எங்கிருந்து வந்தவன்? எங்குபோமவன்? என்று தன் வரத்துப்போக்கு ஸ்வபாவத்தைப்பற்றி விசாரிக்கும் பொழுது, ஆண்தேஹ மெடுத்த அவசரத்தில், தனது பெண்பாதியான தேஹத்தை மனோபாவ மாத்திரமானதாக விட்டுமுதிரவிடாத காரணத்தினால், அவன் தனது அர்த்த சரீரமான பெண் பாகத்தை மூதிரச்செய்து, அஃதோடு பேதமறக்கலந்து இரண்டும் ஒன்றாயமர்வதை யுண்மையிலுணர்ந்து அதன் உள்மர்மத்தை விசாரித்து, விசாரஞானத்தால் அநுபவஞானம் முதிர்ந்து தெளிவுற,சுருதியுக்தியனுபவரீதியாகஆணும்பெண்ணும்அபேதமாய்க்கலந்துகின்றநான், "அஹம் பிரஹ்மாஸ்மி" என்கிற மஹாவாக்கியத்துக்கிலக்காயிருப்பதைகிரமக்கிரமேணஉள்ளபடியுணர்கிறான். உணர்ந்தவன் தான் கடைத்தேறினதுபோல் தனது அர்த்தபாகமாகிய தர்மபத்னியையும் ஸம்ஸார ஸாகரத்தினின்று கரையேற்றுவான் மறுபடியும் பெண்ணுருவாயிருந்து தத்துவ விசாரஞ்செய்து உண்மையுணர்ந்தபின், தன்னைப்போல், அவளையும் பிரஹ்ம ஸ்வரூபமாகவேயுணர்ந்து, தான் உள்ளத்துணர்ந்ததையுணர்த்தி அவளைக்கரையேற்றுமாறு "நீயும் அதுவாயிருக்கிறாய்" என்று "தத்துவமஸி" மஹாவாக்கிய உண்மையைப்போதிக்கவல்லவனான ப்ரபோதஸ்வரூபனாகிறான். இருவரும் கரையேறுமுன் பிரம்மா விட்ட கட்டளைப்படி பிரவிருத்திமார்க்கத்தை யனுசரித்து வந்ததில் சந்ததிவிர்த்தியாகி உலகப்பற்றுமுற்றும் விட்டதாயிருக்கக்கண்டு, இக்குழந்தைகளும், ! சுகிறைகளும்,தனதானியாதி குடும்பங்களும் எத்தன்மையதென்று விசாரிக்க அவையனைத்தும் பிரஹ்மமேயென்றுணர்ந்து "அயமாத்மா பிரஹ்மம்"—இந்த ஆத்மாவெல்லாம் பிரம்மமய மானதேயென்றுணர்ந்து அந்த உண்மையை பிரம்மசரிய தீக்ஷையினால் தன் புத்திரர்களுக்கும் விவாஹ ஸம்ஸ்காரவிதியினால் தன் புத்திரிகளுக்கும் உபதேசித்து அவர்களை தீக்ஷாயுக்தர்களாகச் செய்து சன்மார்க்கத்தில் ஸ்தாபித்து சிஷ்டாசாரத்தை யனுசரித்து அவர்களும் சிவசாம்பிராஜ்யத்தை யடையும்படியான மார்க்கத்தைக்காட்டித் தன் கடமையெல்லாம் செய்துதீர்ந்தபின், எஞ்சியுள்ள பிராரப்த கர்மங்களைப் புசித்து அவையும் அநுபவித்துத் தீர்ந்தபின் நைஷ்கர்மசித்தியுண்டாக,தேஹத்தோடிருந்தாலும், தேஹம் கழன்று போனாலும், பிரஹ்மத்தோடு ஒன்றாய்க் கலந்து விதேஹ கைவல்யனாய் விளங்குகிறான். ஆகையால் "மணமெனப்படுவதுமங்களாகாரமே" யென்ற மந்திரத்தின் பொருள் இல்லறத்தை யனுசரித்து நல்லறம் செய்து புருஷார்த்தங்களை யனுபவித்தபின் ஸ்வாத்மாராமனாய் ஆனந்த பூரிதனாய் விளங்கு மங்களாகாரமாகத் தன்னை யறிவதற்குச் சாதகமாயிருப்ப தெதுவோ அது மணம் எனப்படுவது. "இல்லறமல்லது நல்லறமல்ல" என்று சொன்ன ஆப்த வாக்கியத்தின் உண்மைபற்றி அந்த மணத்தின் சிறப்பை யுணர்த்தவும் அது புனித ஸம்ஸ்காரமேயன்றி காமவிகாரமல்ல வென்று விளங்கவும் அஃதைத் "திருமணம்" எனச் சிறப்பித்துக் கூறினதாம். மாப்பிள்ளைபிழகும், மணத்தின் பெருமையும் இப்படியாக, "மாப்பிள்ளை தேடல்" என்னும் சாமான்யப் பெயரைக் கொண்டு விவாஹத்தின் அந்தர் லக்ஷியமாம் 'காணமற்போன கட்டழகன்" இலக்ஷணங்களைக் கூறுவோம். சாமர்த்திய முள்ளவர்கள் அவனைக் கண்டுபிடித்துக்கொள்ளட்டும்.

---

## PRACTICAL HINTS ABOUT WATER.

## அனுபவமுறை.

## தண்ணீரைப்பற்றி.

தண்ணீர் சுத்தம்:—பம்பாயில் கூடிய மெடிகல் காங்ரெஸ் சபையில் டாக்டர் கே. இ. தாதாகாஞ்சி என்னும் பார்ஸி டாக்டர் குடி தண்ணீரின் சுத்தத்தைப்பற்றி இரண்டுவியாஸம் எழுதி வாசித்தார். குடிதண்ணீரின் சுத்தத்தை யறியும்பொருட்டு ஜலபரீக்ஷை செய்யும் ரஸாயனபரிசோதகர், தண்ணீர் ரஸாயன பரீக்ஷையினால் மட்டும் சுத்தமாக விருக்கிறதாவென்று பார்த்தால்போதாது. அஃதோடு கூட,

(1) தண்ணீர்த்துறை அல்லது தண்ணீர்க் கேணியின் சுற்றுப்பக்கங்களின் நிலவளம், தரையின் சுத்தம் முதலான விஷயங்களைக் கவனிக்கவேண்டும். "தண்ணீர் நிலநலத்தால்" என்பதை மறக்கவொண்ணாது.

(2) தண்ணீர் ஆகாசத்திலிருந்து விழுந்து ஊற்றுக் கண்களாகச் சேரும் நிலத்தின் ஸ்வபாவத்தையும், மேல் தரையின் சுத்தத்தையும் கவனிக்கவேண்டும். "தீர்த்தக்கரைகளில் அசுத்தஞ் செய்கிறவன் மஹாபாதகனாகிறான்" என்கிற ஸநாதனதர்ம விதியை இக்காலத்து நாஸ்திகமத நாகரிக புஞ்சங்கள் கவனிப்பதில்லை.

(3) குடி தண்ணீர், சிற்றாறு, வாய்க்கால் முதலியவைகளினின்றுஎடுத்துவரப்பட்டால்அதன்கரைகள் இருபக்கமும்சுத்தமாயிருக்கிறதா? அதைச் சுற்றியுள்ள ஜனங்கள் அந்த அசுத்த விஷயத்துக் குபயோகப்படுத்திக் கெடுத்து வருகிறார்களாவென்று பார்க்கவேண்டும்.

* * *

இங்கிலாந்திலுள்ள லோகல்கவர்ன்மெண்ட் போர்டுக்கு சுகாதார இலாகாத் தலைவராயிருக்கும் டாக்டர் தாரன் என்பவர் இவைகளைக்கவனிக்கவேண்டியதின் அவசியத்தைப் பற்றிப் பின்வருமாறு தமது அபிப்பிராயத்தைத் தீர்க்கமாய்த் தெரிவித்திருக்கிறார்:—

"ரஸாயன பரிசோதனையினாலும் வியாதி வித்துக்களான ஜீவ அணுக்கள் சம்பந்தமான பரிசோதனையினாலும்மட்டும் குடிதண்ணீரின் யோக்கியதையைப்பற்றி அபிப்பிராயம் கொடுப்பதில் பிரயோசனமில்லை. அந்தத் தண்ணீரின் உற்பத்தி ஸ்தானத்தின் நிலைமையைப் பற்றிச் சுகாதார வைத்தியர் நேரில்பார்த்துப் பரிசோதித்தறிந்தபின்னே அவர் அபிப்பிராயம் உபயோகப்படுவதாகும்."

(1.) இந்தியாவிலுள்ள குடி தண்ணீரின் குணகுணங்களை, ஐரோப்பியதேசங்களிலுள்ள குடி தண்ணீரின் குணகுண விசேஷங்களைக்கொண்டு நிர்ணயித்தல் கூடாமையாம்.

(2.) குடிதண்ணீரின் குணங்கள் இன்னவையென்று தெரிந்துகொள்ளவேண்டியது அவசியம். இது பட்டண வாசங்களிலுள்ள ஜலாதாரங்களின் குணத்தைக்கண்டறியவேண்டிய வைத்தியர்களுக்கு வெகு சாதகமாம்.

(3.) ஜலபரிசோதனை செய்யுமவர்க்குக்குடி தண்ணீரின் மாதிரியனுப்புவதோடு, நீர்வாசி, நிலவாசி, அதைச் சுற்றியுள்ள ஜனங்களின் குணவாசி முதலிய இன்னும் அந்த ஜலத்தின் சுத்தாசுத்தத்தைப் பாதிக்கத்தக்க விவரங்களெல்லாம் பூர்ணமாய் தெரிவிக்கப்படல் வேண்டும்.

(4.) பரிசோதனைக்காகத் தண்ணீர் மாதிரிக்கு அனுப்புவதில், அனுப்புங்காலம் அதிகமாயிருக்கக்கூடாது. காலதாமதத்தால் தண்ணீரின்குணம் மாறிவிடலாம்.

* * *

### அசுத்தத் தண்ணீரினால் விளையும் வியாதிகள்

அசுத்த நீரைப்பருகுவதனால்வரும் வியாதிகளில் 'கலரா' என்று சொல்லும் வாந்திபேதி முக்கியமானது. இது ஜனங்களை ஆயிரக்கணக்காக வாரிக்கொண்டுபோய்விடும். இந்தவியா

தி முக்கியமாய் குடி தண்ணீரிலுள்ள தோஷத்தால் நேரிடுவதாயிருப்பதால், சிறு பட்டணங்கள் கிராமங்களில் இந்தக் கொள்ளைநோய் கண்டால், உடனே ஜலாதாரத்தைக்கவனித்து ஜனங்கள் குடி தண்ணீரெடுக்கும் கேணியில் "பெர்மாங்கனேட் ஆப் போடாஷ்" என்னும் மருந்தை அதில்விசேஷமாகப் போட்டுக் காப்பாற்றவேண்டும். அந்த நீர் அசுத்தப்பட்டிருந்தால், அம்மருந்தின் நிறம் அதில் பற்றாது. அசுத்தம் நீங்கினால் தண்ணீர் சிவப்புக்கலந்த மஞ்சள் நிறமாகவிருக்கும். இந்த நிறம் காண்கிறவரையிலும், கண்டு 12-மணி நேரம் நிறம் மாறாதிருக்குமளவும் அந்தமருந்து சேர்க்க வேண்டும். ஜீவ அணுக்களான கசுமாலங்கள் நிறைந்திருந்தால் ஜலத்தின் நிறம் மாறுவதில்லை: அவை செத்துப் போனால் பிறகு தண்ணீர் நிறம் மாறும்.

* * *

## நிலவளம், நீர்வளம்.

மனிதன் வாசஸ்தானம் தேடும் பொழுது நிலவளம், நீர்வளம் இரண்டும் பார்க்கவேண்டும். நிலத்தின் வளம் நீர்நிலையால் பாதிக்கப்படுகிறது. உஷ்ணபூமியென்றும், சிதள பூமியென்றும், சுக்கான் தரையென்றும், களிமண் தரையென்றும் சொல்கிறார்கள். தண்ணீர் நிலநலத்தால் சோபிப்பதுபோல, நிலத்தின் குணமும், அதாவது பூசாரமும் ஜலவிசேஷத்தால் பாதிக்கப்படுகிறது. பூமியின் கீழ் நீர்வளம் ஜாஸ்தியாயிருந்தால், தேகாரோக்கியம் அதிகமாகவும், குறைந்திருந்தால், வியாதிமரணம் அதிகமாகவும் இருக்கிறது. இஃதை வருஷாவருஷம் தரையின் கீழுள்ள தண்ணீர் நிலையைப் பரிசோதித்துப் பார்த்து, நீர்வளம் நிறைந்திருக்கும் பொழுது 5-வயதுக் குட்பட்ட குழந்தைகளின் மரண சங்கியை குறைந்தும், நீர்வளம் குன்றிய பொழுது அதிகப்பட்டும் நிற்கக் காணப்பட்டிருந்தும், வேறு சாஸ்திர ஸம்மதமான ஊகங்களாலும் கண்டு பிடித்திருக்கிறார்கள். ஒரு ஸ்தலத்துக்கு மூர்த்தி, தீர்த்தம், க்ஷேத்திரம் என மூன்று வித விசேஷங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. க்ஷேத்திரம் நிலத்தின் வாசயோக்கிய விசேஷத்தைக் குறிக்கும்; தீர்த்தம் என்பது ஜலத்தின் ஸ்நாந பானாதி மஹத்துவத்தைக் குறிக்கும். மூர்த்தியென்பது பஞ்சதன்மாத்திரைகளில் ஒன்று விளங்கப்பெறும் தியானாருகமான யோக்கியதையைக் குறிக்கும். பாலைவனத்தில் பேய்த்தேரைக் காணலாமேயன்றி பௌமிய, 'ஸௌமிய, ஸுகேசி மூர்த்தங்களைக் காணலரிதாம். ஆகையால் பூமாதேவி தாய் ஸ்தானத்திலிருக்கிறாளென்பது மதசம்மதமான உண்மையாயிருப்பதுபோல், மேற்றிசையார் சாஸ்திரப்படிக்கும் அது உண்மையேயாம். தாய்க்கு வரட்சிகண்டால், பிள்ளைக்கு அரிஷ்டம்தானே ஐந்துவயது வரையில் குழந்தைகள் பூசாரத்தை விசேஷமாக ஆச்ரயித்து வளர்கிறபடியால் அவர்களின் மரண சங்கியை வேறுபடுகிறது.

* * *

## அம்மைநோய் அல்லது மஹாமாரி (Zymotic diseases) பித்தவாதசுரம் (typhoid).

சவக்குழிகள், சமாதி நிலங்கள் வழியாகச் செல்லும் ஊற்றுக்கண்களிலிருந்து சுரக்கும் நீர் ஸ்படிகம்போல் பளபளப்பாகவும், பிரகாசமாகவும், பார்ப்பதற்கு ரம்மியமாகவும் இருப்பது வழக்கம். சவங்களிலிருந்து விடுபட்ட 'நிட்ரஜன்' கலந்த லோகங்கள் அதிகமாயிருப்பதால், இத்தண்ணீர் அப்படியிருக்கிறது. மோஹினி ரூபம் கண்ணுக்கு ரமணீயமாயிருந்து சுகம் தருவதுபோல் ஆளையெப்படி உறிஞ்சி விடுகிறதோ, அப்படி இந்தத்தண்ணீரும் முகக்கண்ணுக்குச் சுத்தமாயும் ரமணீயமாயும் தோன்றி மிகவும் பொல்லாத கொடிய வியாதிகளையுண்டுபண்ணும். இத்தண்ணீரைப்பருகுவதனால் அம்மை, கலரா, பித்தவாத சுரம்போன்றரக்தத்தை முறிக்கும் கொடிய

வியாதிகளுண்டாகின்றன. வித்தைப்போலிருக்கும் மாமுமாதலால், தேகம் கட்டுவிட்டுக் கலகலத்து அழுகிப்போனதால் விடுவிக்கப்பட்ட ஜீவஅணுக்களும் அவையிருப்பதற்கிடமான கடசத்துக்களுக்கிறைந்த இந்த ஜலம் தேஹத்திற் புகுந்ததும் உஷ்ணத்தைக்கொண்டு உயிரை யமுக்கிப் பின்பு ரத்தத்தை முறித்து, தேஹத்தின் உறுப்புகள் கட்டுவிட்டுக் கலகலத்து அழுகிப்போகச் செய்கிறது. சுத்தோதகம் பிராணசக்திக் கிருப்பிடமாயிருந்து அமிர்தசஞ்சீவியாய் உதவுவதுபோல, இந்த அசுத்தஜலமாம் ஆலகாலத்தை யொத்த விஷநீர் நஞ்சாயிருந்து நாடியோட்டத்தைச் சிதைத்துப் பிராணனைப்பஞ்சுபட்டபாடு படுத்தி, தேஹத்தைஉயிரோடிருக்கையிலே யழுகிப்போகச்செய்கிறது. ஸம்ஹாரசக்தியே உடலிற் புகுந்ததுபோலுள்ள இந்த வியாதிகள் வந்தால் இரக்தம் முறிபட்டுப்போகிறபடியால் ஔஷதப்பிரயோகம் அவ்வளவாகப் பலிக்கிறதில்லை. ஆகையால் மனோபலத்தாலும்ஆத்மசக்தியாலுமே இவற்றை வெல்லவேண்டும். இதற்காகவே மஹமாரியைத் தெய்வமாகக் கொண்டாடவேண்டுமென் றேற்படுத்தியது. இதில் ஓர் ஆத்மவைத்திய ரகசியமிருக்கிறது. அதை விவேகிகளுக்கன்றி சாமான்யர்க்குச் சொல்லுதல் அநர்த்தமாய் விளையும்.



## HEALTH OF BODY—EARTH'S INFLUENCE ON IT.

## தேகசௌக்கியம்.

### 1. நிலம்.

ஜனவரி சஞ்சிகையில் தேகசுகத்திற்கான பதினொரு விஷயங்களில் இங்கு நிலத்தைப் பற்றி யெழுதுவோம். இந்நிலவுலகம் நமது கண்ணுக்குத் தட்டை வடிவமாகப் புலப்படினும், உண்மையில் ஒருபெரிய உருண்டை வடிவமென்று இப்பொழுது சாஸ்திரங்களால் நன்கு விளங்குகின்றது. பூமியின் மேற்புறத்தைப் பற்றிக் கூறுகிற சாஸ்திரத்திற்குப் பூகோள சாஸ்திரமென்னும் தமிழ்ப்பெயரே பூமி உருண்டை வடிவ மென்பதற்கு ஒரு சான்றாகும். கோளம் என்றால் உருண்டையென்பது பொருள். இப்பூகோளத்தின் உட்புறம் எவ்வாறிருக்குமென்று தெரிந்துகொள்ள முயலல் கூடாத விஷயமாக விருக்கிறது. பூமியின் மேற்புறத்திலே இருக்கின்ற பொருள்களைப் பற்றிக்கூறும் சாஸ்திரத்திற்குப் பூமிகரண சாஸ்திரமென்று பெயர்; அஃதாவது மண், கல் முதலியவைகளைப் பரிசோதித்தறியும் சாஸ்திரமே.

இந்தப்பூமியின் குறுக்கே ஒரு புறமிருந்து மற்றொருபுறம் வரைக்கும் நேராகப் பெரிய சுரங்கமொன்று வெட்டி அதன் மூலமாக நாம் விஷயங்களை யறிந்துகொள்ளப் பிரயத்தனப்படல் வீணேயாம். இக்காலத்தில் புதுவை காரைக்கால் முதலிய பெரியநகரங்களில் ஆர்ட்டிசன் கிணறு (Artesian well) அமைக்கப்பட்டிருக்கிறது. அஃதாவது பூமியினின்றும் அந்தக்கிணற்றின் வாயின்வழியாக ஜலம் எப்பொழுதும் சிறிதும் இடைவிடாது வந்துகொண்டேயிருக்கும். இந்தக் கிணறு தோண்டுகிறது எவ்விதமெனின், பூமியில் இருப்புக் குழாய்வைத்து அதற்குள் இருக்கும் மணலைத் தோண்டத் தோண்ட அக்குழாய் உள்ளே இறங்கும். தண்ணீர் தடையின்றி அக்குழாயின் வாயிலாகவரும் வரையில் மண்ணைத்தோண்டிக் குழாயை யுள்ளே செலுத்தல் வேண்டும். இதன் மூலமாக நாம் சிலவிஷயங்களை யறிந்து கொள்ளலாம். இவ்வாறு தோண்டப்பட்டவற்றில், மணல், பருக்காங்கல், களிமண், கருங்கல், தரிமுதலிய பலவித உலோகங்கள் அகப்படுகின்றன. அல்லாமலும் பூமியின் ஐந்தாறு மயில்தூரம் வரையிலும் இவ்விதமான உலோகங்கள் அகப்படுகின்றனவென்றுந் தெரியவருகிறது. பூமியின் உட்பாகத்தில் ஓர் வகையான மெல்லிய பொ

ருள் 7000-மைல் தூரம் ஒரேவிதமாகப் பரந்திருப்பதாகவுந் தெரியவருகிறது. இந்தப்பூமியின் மேற்புரணியில் நாம் எல்லோரும் வசித்துக்கொண்டிருக்கிறோம். நாம் எந்தவிதமான பூமியின்பேரில்வசிக்கின்றோமோ அப்பூமியின் தன்மையும் குணங்களும் நம்முடைய தேக சௌக்கியத்துடன் சம்பந்தபட்டிருக்கின்றன. நிலத்தின் தன்மையை ஆராயுங்கால் நிலத்தினிடத்தே நானாவித உலோகங்களும் பிராணிவர்க்கங்களும், இவைகளின் கழிவுகளும், படிந்துகலந்திருக்கின்றன. இவ்வண்ணம் பலவிதமாய்க் கலப்புகள் சம்பந்தப்பட்ட நிலத்தினிடத்து சில பாகங்களில் வாயுவும் நீரும் தோன்றும். இவ்விதம் கலந்த வாயுவாலும் நீராலும் உண்டாகும் சுகதுக்கங்களைப்பற்றிக் கூறுவாம்.

சூரியனின் பிரகாசத்தினாலும், உஷ்ணத்தினாலும் மண்ணின் மீதிருக்கிற வாயு சலனமுற்றுக்கொண்டே யிருக்கிறது. இவண் சூரியனது குணகுணங்களைப்பற்றிச்சற்று ஆலோசிப்பாம். சூரியன் பூமிக்கு என்றும் ஒரே தூரத்தில் இல்லாமல் கொஞ்சகாலம் சற்றுநெருங்கியும் கொஞ்சகாலம் சற்று அகன்றும் உள்ளது. ஜூலை மாதத்தில் பூமிக்குச் சமீபத்திலும் டிசம்பர் மாதத்தில் கொஞ்சம் தூரத்திலுமிருக்கிறது. அது நெடுந்தூரத்தில் இருப்பதால் நமது கண்ணுக்கு நன்றாகப் புலப்படவில்லை. அது பூமிக்குச் சற்றுத்தூரமாக விருக்கிறகாலத்தில் 9,29,63,000 மயில் தூரத்திலும் சமீபத்தில் இருக்குங்காலத்தில் 8,98,97,000 மயில் தூரத்திலும் இருக்கிறது. அது சராசரி பூமிக்கு 9,14,30,000 மயில் தூரத்திலுள்ளது. அதன் ஒரு முனையிலின்றும் மறுமுனைவரைக்கும் நடுவில் அளந்தால் அதன் அளவு சுமார் 8,52,900 மயில் நீளமுள்ளது. அதேமாதிரி பூமியையளந்தால் பூமியின் அளவு 79,265 மைல் நீள முள்ளது. ஆகையால் சூரியனின் அளவானது பூமியின் அளவைப் பார்க்கிலும் 107 மடங்குக்குமேல் கொஞ்சம் அதிகம்.

சூரியனின் கிரணங்களிலுள்ள பொருள்களைப் பகுத்தறியின், பிராணவாயு, காந்தம் முதலிய பல பொருள்களால் சூரியமண்டலம் அமைக்கப்பட்டிருக்கிறதென்று சிலர் கருதுகிறார்கள். ஏராளமான வெளிச்சமும் உஷ்ணமும் சூரியமண்டலத்தி லிருந்து ஓயாது அதைச்சுற்றி எங்கும் சென்றுகொண்டேயிருக்கிறது. நமக்கு வாசஸ்தானமாகிய இந்தப்பூமி சூரியனிலும் இருநூறு கோடியில் ஒரு பங்குக்குச் சற்றுக் குறைவாக விருப்பதனாலும், அதற்கு அநேக காதவழி தூரத்திற்கப்பாலிருப்பதனாலும் சூரிய வெளிச்சமும் உஷ்ணமும் அவ்வளவு அதிகமாகவின்றி அவற்றின் இருநூறு கோடியில் ஒருபங்கும் சற்றுக்குறைவாகவே பிரகாசம் மழுங்கி உஷ்ணங் குறைவுற்றுப்போகிறது. இவ்வாறு சூரினின்வெளிச்சமும்உஷ்ணமும் குறைவுபடாது பூமிக்கு நேராகவருமாயின் பூமி தாங்கமாட்டாது. அதாவது பூமியிலிருக்கின்ற புல் பூண்டு பிராணிவர்க்கங்களுட்பட நாம் எல்லோரும் வாசஞ்செய்யமுடியா. இந்த வெளிச்சத்திற்கும் உஷ்ணத்திற்கும் எற்றவண்ணமே இந்த உலகத்திலுள்ள படைப்புகள் யாவும் படைக்கப்பட்டிருக்கின்றன. அல்லாமலும் சூரியனுக்குப் பூமி முதலிய கிரகங்களுக்குப் பிரகாசத்தையும் வெப்பத்தையும் கொடுக்குந் திறமிருப்பது மன்றி, அவற்றையெல்லாம் விழவொட்டாமல் இருக்குமாறு செய்கிற ஆகர்ஷண சக்தியுமுண்டு. ஒரு சிறு இரும்புத் துண்டைக் காந்தத்திற்கு எதிரே பிடித்தால், அவ்விரண்டிற்கும் மத்தியில் நமது கண்ணுக்குப் புலப்படக்கூடிய தடையொன்றும் இல்லாவிடினும், அந்த இரும்புத்துண்டை காந்தம் எவ்வாறு இழுத்துக் கொள்ளுகிறதோ அவ்வாறே பூமியை இழுத்துக்கொள்ளுகிற காந்தக்கவர்ச்சி சூரியனுக்குமுண்டு. இரும்புத்துண்டு காந்தத்திற்குச் செல்லுகிறகவர்ச்சிக்குக் காந்தக்கவர்ச்சியென்றும், காந்த மில்லாவிடத்து அந்த இரும்புத் துண்டு பூமியை நோக்கிச் செல்லுகிற கவர்ச்

சிக்கு*இழுப்புக்கவர்ச்சியென்றும் பெயர்பெறும். வட தென் துருவங்களைப் பார்க்கிலும் பூமியின் நடுவில் இழுப்புக் கவர்ச்சி அதிகம். நாம் ஒருபொருளை நிறுத்துப் பார்த்தால் அதன்எடை பூமத்தியில் அதிகமும், துருவங்களில் குறைந்தும், துருவங்களுக்கும் நிரட்சரேகைக்கும் மத்தியிலுள்ள இடங்களில் அவ்வவற்றின் அக்ஷாம்சத்துக்குத் தக்கவாறு போகப்போகக் குறைவுற்றிருப்பதைப்பார்க்கலாம். லண்டன்மாநகரத்தில் ஒரு மணங்கு நிறைகொண்ட பொருள் ஒன்றை நிரக்ஷரேகையண்டை துலையில் நிறுத்திப்பார்த்தால் அதிகமாகவும் துருவங்களில் குறைந்துபோயுமிருக்கும். இழுப்புக்கவர்ச்சி யில்லாத இடமொன்றிருந்து அவன் அப்பொருளை நிறுக்கின் எடையும் இராது; பொருளும் அவ்வாறேதா னிருக்கும். ஒளியும் உஷ்ணமும் உயிர்வாழ்க்கைக்குக் காரணமென்பது யாவரும் அறிந்தவிஷயமே. சூரியனிடத்தினின்று ஒளியும் உஷ்ணமும் வாராவிடில் பூமியில்ஒன்றும் பிழைத்திராது.

முன்கூறியபடி, மண்ணின்கீழ் இருக்கும் வாயு சலனப்பட்டுக்கொண்டிருப்பதுபோல இவ்வித சலனம் மழையாலும் உண்டாகுகிறது. அஃது எவ்வாறெனின், மழைபெய்து தண்ணீர் அதிகமாய்ப் பூமிக்குள்சென்றுபூமியைஊறச்செய்தவுடன் முன்தங்கியிருந்த வாயுஇருப்பதற்கு இடமின்றிவிரைவாகவெளிப்படுகின்றது. நாம் ஒரு பள்ளத்தை மண்ணினல் தூர்த்து அதன்மேலுள்ள ஆகாயத்தையும் முன் அதன்மேலிருந்த ஆகாயத்தையும் சீர்தூக்கிப்பார்க்கின், பள்ளத்தைத் தூர்ப்பதற்கு முன் அங்கேசுத்தமான ஆகாய மிருந்ததாகவும், தூர்த்தபிறகுசுத்தமில்லாதஆகாயம் இருப்பதாகவும் நாம் அறிந்துகொள்ளலாம். தரைகெட்டிப்படுகிறவரையில்அதில்பரிசுத்தமான ஆகாயம் இராது. தரைகெட்டிபபடுவதென்ருல் அவ்விடத்தி னின்றும் காற்றுக் கொஞ்சம்கொஞ்சமாக அகன்று போவதே.

* Gravitation

மண்ணுடன்சம்பந்தப்பட்டு இருக்கும்ஜலம் ஈரம் என்றும் கசிவு என்றும் இரண்டு வேறுபாடுடையது. மண்ணினுடைய இடைவெளிகளில் கொஞ்சம் ஆகாயமும் கொஞ்சம் சலமும் கலந்திருந்தால் அது ஈரம்என்றும், மண் காற்றின்றி ஜலத்தில் நெருங்கி மிதக்கின் அது கசிவு என்றும் பெயர் பெறுகின்றன.

நன்ருய்க் காய்ந்த மண்ணின்மேல் வாசஞ்செய்வது எப்பொழுதும் நம்முடைய தேகசௌக்கியத்தைக் காப்பாற்றும். ஈரத்தரையில்வசித்தால் அது நமது சுவாசாசயத்தைக் கெடுத்து காசம் முதலிய கொடியவியாதிகளுக்கு நம்மை உள்ளாக்கிவிடும். ஈரத்தரையில் வசிப்பதனல் உண்டாகும் வியாதிகள்:— விஷபேதி, வயிற்றில் கட்டி, விஷசுரம், கபரோகம் சிலேஷ்மரோகம், முறைச்சுரம், சந்திவாதரோகம் இன்னும் பலவிதமான நோய்கள். கசிவுள்ள இடத்தில் வசிக்கின் மேற்கூறிய வியாதிகளுடன் சீதபேதி சின்னம்மைமுதலிய வியாதிகளும் உண்டாகின்றன.

அன்றியும், நாம்வசிக்கும் நிலம் மலைசார்ந்த இடமா,சமபூமியான இடமா? மலைப்பக்கமாகவிருந்தால் உயரம்வடிவம் என்ன? சமபூமியாயிருந்தால்மேடாபள்ளமா?அதற்குத்தண்ணீர் பாயும் கால்வாய்என்ன, தண்ணீர்வடியும்கால்வாய்என்னஎன்றுகாம்முற்றும் ஆலோசித்துப் பார்த்தல்வேண்டும். ஏனெனின் இவைகளில் ஒவ்வொன்றும் நம்முடைய தேக சவுக்கியத்துடன் சம்பந்தப்பட்டிருக்கிறது. மலையின் சிகரம் நமக்கு வாசஸ்தானத்திற் குரித்தானது; தேகசௌக்கியத்தைக் கொடுப்பது. சமதரையிலே சற்று மேடான இடமும் நமக்குத் தேகசவுக்கியத்தைக் கொடுப்பது. ஈரமுள்ள இடம் இவைகளைப்போல சிறந்தது அல்ல. அதிலும்பலவிதவிருக்ஷங்களிருப்பின் இந்தமரங்கள்காற்ருேட்டத்தையும் சூரியனின் உஷ்ணத்தையும் தடுப்பதனல் இந்த இடம் சிறிதும் சிறந்ததல்ல. இந்த இடங்களில் நாம் வசிக்க நேரின் மரங்களை நன்ருய்க் கழித்து

சூரியன் உஷ்ணமும் காற்றும் நன்றாகப்படும் படிச்செய்தல்முக்கியம். மலைகாடுகளிலும்தன் னைச்சுற்றிலும் நான்கு பக்கங்களிலும் சுவர் போல் மலையிருப்பின் இந்த இடங்களும்நமது வாசஸ்தானத்திற்குப் பொருந்தியதல்ல. இங் கும் காற்றோட்ட மிருக்காது. மலைகளி லுள்ள மரங்களின் இலை கிளை முதலி யவைகள் கீழேவிழுந்து அழுகி துர்க்க ந்தம் வீசும். காற்றின் சலனம் அங்கு இல்லாததனால் அது தேக சௌக்கி யத்திற்கு ஒவ்வாது; பலவிதகெடுதிகளை விளை விக்கின்றது. மலையடிவாரத்தி லுள்ள இடங் களும் பூமியின்மட்டத்திற்குக் கீழ்பாலுள்ள இடங்களும் இத்தன்மைத்தே. அல்லாமலும் கருமணல் சூரியனின் உஷ்ணத்தை அதிக மாகக்கிரகிக்கும் தன்மையுள்ளது. பொதுவா கக் கருமையான பொருள்களுக்கு சூரிய உஷ் ணம்அதிகமாக வாங்கும்குணமுண்டு இக்கார ணம் பற்றியே வெப்யில் காலங்களில் கருப் புத்துணி வாய்ந்த குடையை நாம் வெளியில் பிடித்துக்கொண்டுபோனால் அது சிக்கிரத்தில் நமக்கு அதிக சூடாகத் தோற்றுவதை நாம் இன்னும் பார்க்கலாம். ஆகையால் வெள்ளைத் துணிபோட்ட குடையே சிறந்தது. இதைப் போல நமதுவாசத்திற்கும் வெண்மணலுள்ள இடங்கள் சிறந்தன. கருமணலுள்ள இடங் களில் சூரியஉஷ்ணம் அதிகம் கிரகிப்பதனால் அவ்வளவு பொருத்தமுடையதன்று.

பு. து. இரத்தினம் பிள்ளை.

❋ ❋ ❋

## SANKARA PRYAN.

## சங்கரப்பிரியன்.

"எங்கள் எஜமான் இன்று காலையில் தனது உத்தியானவனத்தின் எல்லையில் பக்ஷிவேட் டையாடிக்கொண்டிருக்கையில், அவரது கையி லுட்கார்ந்திருந்தவேட்டைராஜாளி, ஜீவ்வெ ன்றுபேலேகிளம்பிஒரு மாடப்புறாவைத்துரத் திக்கொண்டுபோயிற்று. அதன்பின்சென்றஎம் யஜமான், நீர் நித்திரை செய்துகொண்டிருந்த ஆலமரத்தடியில் வந்து மூர்ச்சைபோயிருந்த தங்களைப் பார்த்து, பரிதாபப்பட்டு உடனே ஒரு பல்லக்கைவரவழைத்து, அதில்தங்களைத் தூக்கிவைத்து இவ்விடம்கொண்டுவர ஏற்பாடு செய்தார்." என்றுசொல்லிக்கொண்டிருக்கும் சமயத்தில் நமது கோலாஹல செட்டியும் அவ்வறையில் வந்து, நமதுமனோரஞ்சனியின் எதிராகவுள்ள ஒருசோபாவில் உட்காரப்பின் வரும் சம்பாஷணை நடந்தது.

கோலாஹலசெட்டி:—அம்மணி, இப்பொ ழுது உடம்பு எப்படியிருக்கிறது. மற்றவை கள் பிறகு பேசிக்கொள்ளலாம். தாங்கள் பட்டினியாயிருப்பதாய்க் காண்கிறது. ஏதா வது கொஞ்சம் ஆகாரம் பார்த்து களைதீர்த் துக்கொள்ளுங்களென்று சொல்லி, அநேக வகை சிற்றுண்டிகளும் பாலும்கொண்டுவந்து வைக்க ஏற்பாடுசெய்ய, நமது மனோரஞ்சனி யும் கொஞ்சம் பழமும் பாலும்அருந்தி களை ஆறினவளாய்ப் பின் வருமாறு கோலாஹல செட்டியைப்பார்த்துச் சொல்லலாயினாள்.

மனோரஞ்சனி:—ஐயா! தாங்கள் எனக்குச் செய்த உபகாரத்திற்கு நான் என்னபதில் செய்யப்போகிறேன். தங்களுடைய பெயர் முதலியனவைகளைச் சொல்லில் இரவும்பகலு மாகத் தங்களுக்குச் சகலபாக்கியங்களையும், ஐசுவரியங்களையும், சுகங்களையும்மேன்மேலும் விர்த்திசெய்விக்கும்படிகடவுளைப்பிரார்த்திப் பேன். தவிரஎனது கணவன் இவ்வூரில் எனக் காகக்கொஞ்சம் ஆகாரம்தேடிவருவதாக வந் தார். இன்னேரம், நான்படுத்துறங்கின ஆலம ரத்தடி சேர்ந்து என்னைக்காணாமல் என்ன மாய் தபிக்கிறாரோ தெரியாது. தங்கள் மனு ஷியாள் யாரையாவது அனுப்பி அவரைவரு வித்து என்னுடன்கூடி எங்கள் ஊருக்குப் போக உதவி செய்யின், நாங்கள் தங்களுக்கு எங்கள் வாழ்நாள் முழுதும் நன்றியறிவுள் ளவர்களாக விருப்போமென,

கோலாஹல செட்டி:—அம்மணி! விசாரப் படவேண்டாம். இப்பவே ஒரு ஆளை அனு ப்பி, அவர் ஆலமரத்தடி வந்ததும் இவ்விடம்

அழைத்துக் கொண்டுவர ஏற்பாடு செய்கிறேன். அவிடம் அவரைக் காணாவிடில், ஏதாவது அடையாளம் சொன்னால் இவ்வூரிலிருக்கும் பக்ஷத்தில் எவ்விடமிருந்தாலும் அழைத்துக்கொண்டுவர ஏற்பாடு செய்கிறேன். அவர் வந்ததும் நானே, தங்கள் ஊரில் தங்களிருவரையும் கொண்டுபோய் விட்டுவருகிறேன். ஆக்ஷேபம் இல்லாத பக்ஷத்தில் தாங்கள் யார், எங்கிருந்து வருகிறீர்கள். தங்களைப் பார்த்தால் ஒரு ராஜகன்னிகைபோலிருக்கிறதே! ஆலமரத்தடியில் மூர்ச்சித்திருக்கக் காரணமென்ன, தெரிவிக்கக் கேட்டுக்கொள்கிறேன்.

மனோரஞ்சனி:—நான் மத்திய மாகாணத்தின் அரசன், நாகராஜனது சிமந்த புத்திரி. எனது நாயகர் தஞ்சைமாநகரின் அரசனது சீமந்த புத்திரர். எனது தகப்பனார் என்னைத் தனது சத்துரு அக்கிரமபுரத்தரசன் மகன் துஷ்டபுத்திக்குக் கலியாணம் செய்து கொடுக்க ஏற்பாடு செய்திருந்தார். அக்கலியாணத்தினின்று தப்பித்துக்கொள்ளவும், எனது மாமனாரது சைனியங்களைக் கொண்டுவந்து துஷ்டபுத்திக்கு நற்புத்திபோதிக்கவும், எண்ணங்கொண்டு, நானும் எனது அன்பரும் எங்கள் ஊரைவிட்டுப் புறப்பட்டு வந்தோம். வழியில் களைப்பினால் நான் மூர்ச்சித்துப்போக எனதுகணவர், ஆகாரம் தேடிக்கொண்டுவரவும், எனது புலாக்கைவிற்றுப் பணமாக்கிக்கொண்டுவரவும் புறப்பட்டுப்போனார். இதுதான் எனது விர்த்தாந்தம். மேற்சொன்ன அடையாளங்களினால் எனது கணவனைக்கண்டுபிடித்து எனதிடம் கொண்டுவந்துசேர்க்க ஏற்பாடுசெய்யவேண்டும். தவிர இவ்வளவு உபகாரங்களை எனக்குச்செய்த தங்களது பேர்முதலியவைகளைத் தெரிவிக்கப் பிரார்த்திக்கிறேன்.

கோலாஹலசெட்டி:--அம்மணி! நான்முன்ன சொன்னது போல், இவ்வூரிலிருக்கும் பக்ஷத்தில் உமது கணவரை உமதிடம்கொண்டு வந்து சேர்ப்பேன் நிச்சயம். என்பேர் கோலாஹல செட்டி. எனது தகப்பனார் எனக்கு யதேஷ்டமாய்ப் பொருள் வைத்து விட்டு தேக வியோகமானார். எனதுசொத்துக்களையும் பூஸ்திதிகளினின்று வரும் வரும்படிகளையும் செலவழிக்க வழிதெரியாமல் தவிக்கிறேன். போனமாதம் எப்படியாவது ஒருலக்ஷம் ரூபாயைச்செலவழிக்கவேண்டுமென்று யோசித்துக்கொண்டிருக்க சமாசாரப் பத்திரிகையில், கோமூர் என்னும் ரெயில் ஸ்டேஷனருகில் இரண்டு ரயில் வண்டிகள் முட்டிக்கொண்டதாயும்அதில் அநேக ஜனங்கள் சேதமானதாயும் போடப்பட்டிருந்ததைப்பார்த்தேன். பார்த்ததும்சரி! ஒருலக்ஷம்செலவுசெய்ய வழிகிடைத்தது சாவல்சண்டைபார்த்திருக்கிறேன். ஆட்டுக்கிடாச்சண்டை பார்த்திருக்கிறேன். ரயில் வண்டிச் சண்டை பார்த்ததில்லை. இந்தமாதம் அதையும் பார்த்துவிடவேண்டியது என்று தீர்மானம் செய்து ரயில்ரஸ்தா போடுவித்து ஓரேவேகமும், பலமுமுள்ள இரண்டுரயில் வண்டிகள் செய்து, ஒன்றையொன்று முட்டவிட்டுப் பார்த்தேன். என்ன ஆச்சரியம். இரண்டு பெரிய மலைப்பாம்புகள் வாலினால் நின்றுகொண்டு, மார்போடு மார்பு சேர்த்துச் சண்டைசெய்வதுபோல விருந்தது. இவ்வளவுசொத்துக்கள் இருந்தும் என்மனதில் ஒரு குறைமாத்திர மிருக்கிறது. அதென்ன வென்றால், எனது சொத்துக்களை என்னுடன் கூடி அனுபவிக்க என்மனதிற்கிசைந்த ஒரு மனைவி இதுவரையிற்கிட்டாததுதான். அப்பேர்ப்பட்ட ஒருபெண்ரத்தினத்தை இன்றைக்குத்தான் தெரிந்தெடுத்தேன். அவ்விரத்தினம் புதிதாகையால்கொஞ்சம் மங்கலாகவிருக்கிறது. திடீரென்று சாணையில் கடைசல் பிடித்தால் ஒருக்கால்உடைந்து போமோ வென்னும் பயத்தால், கொஞ்சம்கொஞ்சமாய், சாணையில் கொடுத்து, நாளாவட்டத்தில்பட்டைதீர்ந்து அணிந்துகொள்ள எண்ணங் கொண்டிருக்கிறேன்.

மனோரஞ்சனி:—தனக்குள் இச்செட்டியின் வாயில் மது, ஹிருதயத்தில் விஷம் என்

பது இவனது சொற்களால் விளங்குகிறது. வெகு கபடமாயும், தந்திரமாயும், தனது சொத்துக்களின் பெருமையையும், என்மீதில் அவனுக்குள்ள இச்சையையும், சாதாரணமாய்ப் பேசுபவன்போலப் பேசி வெளியிட்டிருக்கிறான். புதிதாய் கண்டெடுத்த ரத்தினம் நான்தான். மங்கலாயிருப்பது நான்எனது புருஷனைவிட்டுப் பிரிந்து மனோவியாகூலத்தோடிருப்பது. உடனே சாணையில் கொடுக்காதது திடீரென்று தனது அபிப்பிராயத்தை வெளியிடாதது. நாளா வட்டத்தில் என்னைத்தன தெண்ணத்திற்குச் சரிப்படுத்திக் கொள்ளத் தீர்மானத்திருக்கிறான். வைரத்தை வைரம் வெட்டும். கபடத்தைக் கபடத்தால் வெல்ல வேண்டும். இப்பொழுது அவனது கெட்ட எண்ணத்தை நான் அறிந்து கொண்டதாகக் காட்டக்கூடாது. எனது நாதனை ஒருநாளும் மறக்கேன். ஆனல் இச்செட்டிப்பதரை ஏமாத்த, அவர் பேரில் அன்பில்லாதவள்போல நடிப்பேன். சமயம் வாய்த்ததும், இச்சண்டாளனது வீட்டினின்றும் தப்பித்துக்கொள்வேன். திண்ணம். செட்டியைப் பார்த்துச் சிரித்துக்கொண்டு இப்பேர்ப்பட்ட பிரபுவினது மார்பை அலங்கரிக்கப்படும்பாக்கியத்தை எந்த ரத்தினம் பெறப்போகிறதோ. தங்கள் இஷ்டம்பூரணமாகட்டும். (மனத்துள்: பூரணமாய் வெள்ளரிப் பழம்போல் வெடிக்கட்டும்)

கோலாஹல செட்டி:—அம்மணி, தங்கள் வீடுபோல் இவ்வீட்டைப் பாவிக்கவேண்டும். எது வேண்டுமென்றாலும் சேடிகளை ஆஜ்ஞாபிக்கநடந்தேறும். இவ்வீட்டிற்கும்இன்னும் மற்ற என்சொத்துக்கள் எல்லாவற்றிற்கும் நீங்கள் எப்பொழுதும் யஜமானியாயிருக்க ஏற்பட்டால் எனது பாக்கியமே பாக்கியம்.

(செட்டி போகிறான்.)

மனோரஞ்சனி:—சேடிகளே, எனக்கு நித்திரைவருகிறது. படுத்துத்தூங்க ஒரு அறையைக்காட்டுங்கள்.

சேடிகள்:—அம்மணி, எங்கள் எஜமான், இந்தபங்களாவைத்தங்களதாகப்பாவிக்கும்படிக்குஆக்கியாபித்தார். இதோவலதுகைப்புறம் படுக்கை அறை யிருக்கிறது. போகலாம் எழுந்திருங்களென, மனோரஞ்சனியும் எழுந்து போய்ப் பவளக்கால்களாலும்தந்தங்களாலும் செய்யப்பட்டுள்ள ஒரு கட்டிலின்மேல், விரிக்கப்பட்டிருந்த ஐடர்வாத்தின் மெல்லிய இறகுகள் அடைக்கப்பட்டுள்ள மெத்தையின் மேல் படுத்துக் கொஞ்சம் கண்ணயர்ந்தாள். கண்ணயர்ந்த கொஞ்ச நேரத்துக்கெல்லாம திடீரென்று விழித்துக்கொண்டு தனக்குள் பின் வருமாறு ஆலோசனை செய்யலாயினள். இப்பொழுது இரண்டுபேர்கள் பேசிக்கொண்டிருந்ததாகவும் அதில் ஒருவனுடைய குரல் இவ்வீட்டு எஜமான் கோலாஹல செட்டியினது குரல்போலும் அவர்கள் பேசிக்கொண்டிருந்த விஷயம் என்னையும் எனது நாதரையும் பற்றினதாயும் இருந்ததாகக் கனவு கண்டேன். நான் சுமார் எவ்வளவுநேரம் தூங்கியிருக்கலாம். இப்பொழுது தூங்கிப்போய் இப்பேர்ப்பட்ட கனவை மறுபடியும் கண்டு மனம்திடுக்கிட்டு எழுந்திருக்க இடம்கொடுக்கக்கூடாது. தூக்கத்தைத்தவிர்க்க இவ்வறையையும் நன்கு சோதித்துப்பார்ப்பேன். இப்பெரிய அறை நான்கு சிற்றறைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றது. ஒரு அறையில்தான் இப்பொழுது நான் இருப்பது. மற்ற அறைகளையும் உட்புகுந்து பார்ப்பேன்என்று சொல்லிக்கொண்டு ஒன்றிற்புக, அவ்விடத்தில் சலவைக்கற்களாலிழைத்த ஒரு ஸ்நாநத்தொட்டியும் சிங்கமுகம்போன்ற குழாயின் வாயினின்று முத்துப்போல் தண்ணீர் கீழேவிழும் காட்சியும் சுற்றிலும் இருக்கும் மேடைகளின் மீது வைக்கப்பட்டிருக்கும் ஸ்நானத்துக்கு வேண்டிய வாஸனைத்தைலங்களும் இன்னம் இதரவஸ்துக்களும் சுற்றிலுமுள்ள கொடிகளின்மீதுபோடப்பட்டிருக்கும்விலையுயர்ந்த ஆம்கடனுமுகம் பார்க்க வைக்கப்பட்டிருக்கும்

நிலைக்கண்ணாடிகளும் காணப்பட்டன. அவ்விடம் விட்டு இன்னமொருகி அறை புக அவ்விடத்தில் வரிசையாய் வைக்கப்பட்டுள்ள அநேக பெட்டிகளில் சிலதில்உயர்ந்தகல்நகைகளும், இன்னும்சிலதில் தங்கநகைகளும்மற்றவைகளில் பொன், வெள்ளி செம்பு நாணயங்களும் வைக்கப்பட்டிருக்கக்கண்டாள். இவைகளைப்பார்த்ததும் மனிதப்பதராகிய இச்செட்டி இவ்விதப்பணப்பெருமையின் தோற்றத்தால் என் மனதைத்திருப்ப எண்ணினவன் போலும்! எனது நாதன் இந்நேரம்ஆலமரத்தடிசேர்ந்துஎன்னைக்காணுமல் எப்படித்தத்தளிகிருரோ! இந்த செட்டி ஆளனுப்பி அவரைக் கூட்டிக்கொண்டு வருவதாகச் செய்தவாக்குத்தத்தம் அணுவேனும் நம்பத்தக்கதல்ல. ஒருக்கால் தனது ஆட்களைக்கொண்டு அவருக்கு ஏதாகிலும் தீங்கிழைத்திருந்தாலு மிருக்கலாம். கூடிய சீக்கிரத்தில் இப்பாதகனதுவீட்டினின்றும் அகல முயற்சிசெய்யவேண்டுமென்றெண்ணிக்கொண்டு நான்காவதறையிற்புக, அவ்விடத்தில் சுவற்றுக்கப்பால் இரண்டுபேர்கள் பேசிக்கொள்ளும் அடுத்தஅதிகாரத்திற் குறித்திருக்கும் சம்பாஷணையைக் கேள்வியுற்றனள்.

---

## XVIII. செட்டியும் வேவுகனும்.

கோலாஹல செட்டி:—ஏண்டா குள்ள நான் சொன்னபடி செய்துமுடித்தனையா?"

குள்ளன்:—அப்படியே செய்தேன். நான் போய் ஆலமரத்துக்கு கொஞ்சதூரத்தில் விறகு வெட்டிக்கொண்டிருப்பவன் போல் பாசாங்கு செய்துக்கொண்டிருந்தேன். கொஞ்ச நேரத்திற்கெல்லாம் பைத்தியக்காரன் போன்ற ஒருவன் அவ்விடம் வந்து மரத்தடியின் கீழ்விழுந்து புரண்டு புலம்பினன். நானும் அவனை நெருங்கி தாங்கள் சொன்னபடி நீங்கள் யாரையா இவ்விடம் இப்படிப் புரண்டு புலம்புவானேன்என்றுவினவினேன். அவனும் அப்பா நீ இவ்விடம் யாதாவதொரு பெண் பிள்ளையைக் கண்டதுண்டோவென்று வினவ, நானும், தாங்கள்சொல்லியனுப்பியபடி "ஐயா இப்பொழுது கொஞ்ச நேரத்துக்கு முன் நான்குபேர்கள் குராகாரூடராய் வந்து இவ்வாலமரத்தடியிருந்த ஒரு ஸ்திரீயை பலவந்தமாய் குதிரைமேலேற்றிக் கொஞ்சதூரத்துக்கப்பாலுள்ள காட்டைநோக்கிக்கொண்டு போகப்" பார்த்ததாகச் சொன்னேன். அவனும் பித்தம் பிடித்தவன்போல் காட்டைநோக்கி ஓடினன். இதற்குள் புலியோ சிங்கமோ எதாவதொன்று அவனைப்பிடுங்கித் தின்னிருக்கும். தங்களது எண்ணமும் நாளாவட்டத்தில் இனிகை கூடுமென்பதில் யாதொரு சந்தேகமுமில்லை.

இச்சம்பாஷணையைக் கேட்டதும் எம் மனேரஞ்சனியும் தொப்பென்று கீழே விழுந்து மூர்ச்சையாயினள். செட்டியும் வேவுகனுக்கு வெகுமதிகொடுத்தனுப்பிவிட்டு வீடுவந்துசேர்ந்தான்.

---

## XIX தப்பித்துக்கோள்ளல்.

மனேரஞ்சனி மூர்ச்சை தெளிந்தெழுந்தபொழுது சுமார் ராத்திரி 10-மணி யிருக்கலாம். எழுந்து தான்முன் படுத்திருந்த கட்டிலின்மீதுட்கார்ந்து பின்வருமாறு சிந்திக்கலாயினள். பாதகன் செட்டிஎன்னமோசம்செய்தான்! ஐயோ! என் நாதரே காளியருள்பெற்ற தமது தலையில் துஷ்ட மிருகங்களுக்கிரையாக வேணுமென்று பிரமன் எழுதினனே! நான் எண்ணியிருந்த எண்ணமெல்லாம் வீணாயினவே!நான் ஒன்றுநினைக்க தெய்வமொன்று நினைத்ததே.என் கதி இனிஎன்னமாகுமோ தெரிகிலேன். இப்பாதகனதுவீட்டில்அறைக்கணமேனுமிருக்க சகியேன். இவ்விடமிருந்து தப்பித்துக்கொண்டு எனதுகணவன்சென்றதாகச் சொன்னகாட்டிற்புகுந்துநானும்துஷ்டமிருகங்களுக்குஇரையாவேன். இப்பொழுதுகபடத்தால் இவ்விடம்விட்டு நீங்க முயலவேண்டும். ஆ; ஒரு உபாயம் இப்பொழுது என் மனதில் உதித்திருக்கிறது. சேடிகளைக் கூட்டிக்கொ

ண்டு அல்பசங்கைக்குப் போகிறவள்போல் வெளியில் கொஞ்சதூரம் சென்று தப்பித்துக்கொள்ள வழிதேடுவேன் என்று சொல்லி பக்கத்திலிருந்த மணியையடிக்க தாதிகளிருவரும் ஓடிவந்து அம்மணி என்ன ஆக்ஞை என்று கேட்டார்கள்.

மனோரஞ்சனி:—“எனக்கு உடம்பு என்னமோபோ லிருக்கிறது, கொஞ்சதூரம் வெளியே உலாத்தி விட்டு வருவோம் வாருங்கள்” என்று அவர்களையும் கூட்டிக்கொண்டு பேச்சுக் கொடுத்துக் கொண்டே வெகுதூரம் வந்து விட்டாள். சேடிகளும் பயந்து “அம்மணி நாம் வெகுதூரம்வந்து விட்டோம் திரும்புங்கள்: வீடுபோய்ச் சேரலாம்” என; மனோரஞ்சனியும் இதோ வந்து விட்டேன். சற்றுப்பொறுங்கள்” என்றுசொல்லி அல்பசங்கைக்குப் போகிறவள்போல ஒரு மரத்து நிழல் மறைவாய்ப்போய்ப் பக்கத்திலுள்ள காட்டிற் புகுந்து ஓடிவிட்டாள்.

எம். என். கணேசய்யர்.



## THE SOUTH INDIAN ASSOCIATION.

## “PLATO'S REPUBLIC”

## தென் இந்தியா சங்கம்.

### “சமஷ்டியில் வியஷ்டி”

“தென்னிந்தியா அஸ்ஸோஸியேஷன்” சங்கத்தின் நான்காவதுவருஷாந்தக்கூட்டம் மார்ச்சுமீ 27-28-ந்தேதிகளில் மைலாப்பூர் ப்ராடீஸ் ரோட்டிலுள்ள ரனடே ஹாலில் கூடியது. முதல்நாள் கனம் மிஸ்டர் ஜஸ்டிஸ் அப்தர் ரஹிம் அவர்கள் அக்கிராசனம் வகித்துப்பிரசங்கம் செய்தார். பிறகு கிறிஸ்தியன் காலேஜ் ப்ரொபெஸ்ஸர் மிஸ்டர் எப். இ. கார்லியவர்கள் “ப்ளேடோ” என்னும் பூர்வீக தத்துவஞானியெழுதிய ‘ரிபப்ளிக்’ என்னும் ‘சமஷ்டியில் வியஷ்டி’ பாவபோதனை கிரந்தத்தின் உட்கருத்தையெடுத்து இக்காலத்துக்கமையப்பொருத்தி ஒரு வியாஸம் வாசித்தார். சமஷ்டி-வியஷ்டி பாவமிரண்டும் ஒன்றுக்கொன்று பொருந்தாதென்றும், சமஷ்டி (ஜனசமூக) க்ஷேமத்திற்காக, வியஷ்டிபாவபுருஷர் (பிரத்தியேக நபர்) தம் சுதந்திரங்களை விட்டுக்கொடுக்க வேண்டுமென்பதும் இக்காலத்து இராஜதந்திரிகள் கொள்கை. ஆனால் இது கேவலம் இந்திரியங்கள் வசப்பட்டுழலும் பெத்தஜீவன்கள் விஷயத்திற் சொல்லப்பட்டது. மனிதர் உள்ளபடி தன்னைத்தானடக்கியாண்டு தன்னையறிந்த தலைவரானால் அவர்கள் தாம் ஒவ்வொருவரும் பிரத்தியக்ரூபிகளென்றும், அப்படியாக சூரியனுக்கும் அதன் கிரணங்களுக்குமுள்ள அத்வைதசம்பந்தமே பிரத்தியேக நபர்களான தங்களுக்கும் சமஷ்டியாம் ஜனசமூகத்திற்கும் பொருந்துமென்றும் அனுபவ பூர்த்தியாகவுணர்ந்து உணர்ந்தபடி நடப்பார்கள். அப்பொழுது சமஷ்டி வியஷ்டி பாவமிரண்டுக்குமுள்ள பேதபாவனையற்றுப் போம். இந்தபேதபாவனை யற்றுப்போனால் எல்லாரும்சேர்ந்து குடியரசுசெலுத்தத்தடையென்ன? இதைத்தான் ப்ளேடோ (Plato) தமது (Republic) ரிபப்ளிக்என்னுந்தத்துவநூலில் நன்றாக ஐயந்திரிபற எடுத்துக்காட்டி ஸ்தாபித்திருக்கிறார்.

ஒரு தேசப்பொதுவுக்கு இந்த வுண்மையையனுஷ்டித்து வந்தால், அத்தேசத்திலுள்ள ஜனங்களின் பொது க்ஷேமத்தைப் பாராட்டும் அரசு குடியரசாகவேயிருக்கும். இந்த வுண்மையை சேதனாசேதனமான ஜீவன்களுக்கெல்லாம் பொருந்த அனுஷ்டித்தால், அப்பொழுது ஜீவேசுவரபேதம் என்பது அற்றுப்போம்: எல்லாரும் ஜீவன்முக்தர்களாய் விடுவார்கள். ஜீவன்முக்தர்கள் நிறைந்த தேசம் எப்பொழுதும் குடியரசாகவேயிருக்கும். இதுதான் ஜீவன்முக்திஸ்வபாவம். மனித சுதந்திரம் பூரணமாய் ஸ்தாபிக்கப்படின் அவன் ஒவ்வொரு விதத்திலும் ஸ்வயேச்சையாய் நடக்கச் சுதந்திரமுள்ளவனாக விருப்

பான். அப்பேர்ப்பட்டவனுடைய "ஸ்வயேச்சை" இக்காலத்து இராஜதந்திரவாய்ப் பேச்சுப் பேசுகிறவர்கள் ஸ்வயேச்சையைப் போல் ஊரார்தலையில் கல்லைப்போட்டு விட்டுத் தான் வாழவேண்டுமென்றும், ஏழைகளை யேமாற்றித் தான் பிழைக்கவேண்டு மென்றும் இல்லாமல், "இச்சாசக்தி உமாகுமாரி" யென்ற சிவசூத்திரப்படி ஈசுவரசங்கல்பமெதுவோ அதுவே தமதுசங்கல்பமுமாமென்று ஈசுவர சங்கல்பத்தின் மகிமையையுணர்ந்து அதற்குத் தாமாகக் கட்டுப்பட்டு நடப்பார்கள். இப்பொழுது ஜெயிலுக்கும் தண்டனைக்கும், ஜட்ஜிக்கும் மாஜிஸ்திரேட்டுக்கும்பயந்து நடப்பவர்கள் அப்பொழுது தர்மாதர்மத்துக்குக் கட்டுப்பட்டு, கர்மாகர்மமென்கிற கர்ம பெந்தத்துக்கு அஞ்சி நடப்பார்கள். அயலானை ஒறுத்தால் தனக்கு ஆபத்து நேரிடுமென்று ஸ்வகாரிய துரந்தரராயிருந்து நடப்பவர்கள், அயலான் உண்மையில் தனக்கு அந்நியமாயின்றி இருவர் உள்ளத்துமுள்ள ஆத்மா ஒன்றாகவிருப்பதால் அயலானை அயலானென்று நினைக்கும்பேத பாவனை தனக்கு பெந்தத்தைக்கொடுத்து எண்சாண் உடம்புக்குள் தன் அகண்டமான அறிவைக் கட்டி யடக்கிவிடுமென்று அஞ்சி, உண்மையான சுதந்திரத்தை நாடி தன்னைப்போல் பிறனை நினைத்தலே தன் அறிவுக்கழகென்று அன்புவழிப்பட்டு நடப்பார்கள். இப்படி நடத்தலில் அசாத்தியம் ஒன்றுமில்லை. சணப்பன்வீட்டுக்கோழி தானே விலங்கிட்டுக் கொண்டதுபோல, சங்கல்பாகார ஜீவன் தானே பெந்தத்தை யுண்டுபண்ணிக் கொண்டு அதன்வலையில் சிக்கி அவதிப்படுகிறான். இந்த அவதியினின்றும் நீங்கும்விதம் என்னவுண்டோ அதுவே மோக்ஷவழி. ஸ்வதந்தரத்துக்கு இன்றியமையாதது அதுவே. இந்த மேலான பரதத்துவம், அமெரிகாவில் அனேகரால் உணர்ந்து கொண்டாடப்பட்டு வருகிறது. ஆனால் அதையுணர்ந்தொழுகும் சக்திபவர்களுக்குப் பூர்வஸம்ஸ்கார தோஷத்தினால் எளிதில் அமைவதாயில்லை. இந்தியர்கள் இதுவிஷயத்தில் உண்மையை யுணர்ந்தொழுக பூர்வ ஸம்ஸ்கார விசேஷத்தினால் அதிகமான சாதக சாதனங்கள் வாய்த்தவர்களாகவிருக்கிறார்கள். இந்த சாதகசாதனங்களை யனுஷ்டித்து அவர்கள் ஒழுகினால் தாங்களும் மேன்மையடைந்து ஸ்வதந்திரபுருஷர்களாவதோடு தங்கள்தேசத்துக்குமேன்மையும் அதனால் இதரதேசத்தார்களுக்கு வழிகாட்டிகளாயிருக்கும் உத்தமவாழ்வும் கீர்த்தியும் பெற்றுவிளங்குவார்கள். இல்லாவிடில் தூங்கி வழிந்துகொண்டிருக்கவேண்டியதுதான். வாச்சாமஹோசரமாய்ப் பேசிவிட்டு காரியத்தில் வழவழவென்றிருப்பதில் பிரயோசனமில்லை. "கல்வியைக்கல்: கற்றபடிநில்" என்ற முதுரையை யனுசரித்து மனசு, வாக்கு, ஒழுக்கம் அல்லது நடத்தை மூன்றும் ஏகமாய்ப் பொருந்த நடக்கவேண்டும். அப்படி நடந்துவந்தால், அவர்கள்,

"மனஸ்யேக வசஸ்யேக,கர்மண்யேகமஹாத்மனாம்" என்னும் மூத்தோர்சொல் வாக்கியப்படி மஹாத்மாக்களாகப் பெருமைபெற்று உலகுய்யவும் வழிகாட்டிப் பெருவாழ்வு வாழ்வார்கள். அப்படிக்கில்லாது பணமே பெரிதென்று பொய்யும் பித்தலாட்டமும் புனைசுருட்டும் கற்று பொய்வாதம்செய்து பணஞ்சுமக்கும் கழுதைகளாகவே யிருப்பார்களாயின், மன மொழி மெய்களும் ஒன்றுக்கொன்று பொருந்தாது வேறுபட்டிருக்கும் இந்த துராத்மாக்கள் தாங்களுங்கெட்டு தங்களைச் சேர்ந்தாரையும் கெடுத்து ஊரையும் பேரையும் ஒருங்கக்கெடுத்து உத்தமமான தம் ஸ்வஜாதீப தர்மத்தை இழந்து ஜாதிமதப் பிரஷ்டர்களாகி 'குலத்தைக் கெடுத்தது கோடரிக்காம்பு' என்றதுபோல் தம்ஜாதியைக்கெடுத்த ஜடாமுனிகளாய் மரமட்டைகளில் தொத்திப் பிழைத்துஎடுத்தஜன்மம் பாழாய் பழிபாவத்துக்காளாய் பூதப்பிரேத பைசாச உலகங்களில் வாழ்ந்துழலவேண்டியவர்களாயிருப்பார்

கள். இந்த இரண்டுவழியில்எந்தவழியைஅனுசரிப்பதென்பதை ஒவ்வொருவரும் தமக்குள் தாமே பரியாலோசித்துத் தீர்மானித்துக்கொள்ள வேண்டும். ஊருக்கு ஒப்புக்கு நடந்துகொள்ளவேண்டிய காரியமல்ல இது. உயிருக்கு உடல் எப்படியோ அப்படிப்போல ஒரு ஜாதிக்குத் தேசம் க்ஷேத்திரம்; ஒரு ஜாதிக்குத்தேசம் எப்படியோ அப்படி உண்மையான மனிதனுக்கு உலகம் க்ஷேத்திரம்: உண்மையான மனிதனுக்கு உலகம் எப்படியோ அப்படிப்போல உண்மையான ஆத்மனுக்கு (ஆத்மசந்தான முதிர்ந்தபுருஷனுக்கு) விராட்ரூபியான பகவான் க்ஷேத்திரம். இந்த விராட்ரூபியின் உயிர்தான் சேதனுசேதனமான எல்லா ஜகத்திலுள்ள கல்மண் புல்பூண்டு பிராணிகளின்உயிர்களும். அப்படிப்பட்ட விராட் ரூபியின்வாக்கே "பொதுஜனவாக்கு"என்றுசொல்லும் தெய்வீகவாக்குக்குச் சமானமானவாக்கு. இந்த வாக்கின் மஹத்துவத்தை ரிஷி வம்சத்திற் பிறந்த நாம் அறிந்துணர்ந்து நடக்கக்கூடியதுபோல் பிறர்க்குஅது அவ்வளவு எளிதாகவிராது. ஆகையால் "விராட் உபாசனைக்கு" சமானமான (Public life) பொதுஜன க்ஷேமத்துக்குழைக்கும் உத்தமவாழ்வை, கேவலம் ஸ்வகாரியத்துக்குச் சாதகமாக்கிக்கொண்டு ஸ்வாமி காரியத்தைவழவழவென்றுவிட்டுவிடுகிறவர்களைப்போல் கொடிய துராத்மா கிராதகரினும் இல்லையென்பது திண்ணம். இதை நம்மவர் உணர்ந்தொழுகவேண்டும்.

மிஸ்டர் கார்லிக்குப்பின்பு, ஒருவர் இந்தியாவில் விலைவாசியதிகப்பட்டிருப்பதைப்பற்றியும், டாக்டர் டி. எஸ். இராமச்சந்திராவ்அவர்கள் சாஸ்திரப் பயிற்சியும் ஜனசமூகத்துக்குழைத்தலும் என்பதைப்பற்றியும் வியாசமெழுதி வாசித்தார்கள். இஃதோடு முதல் நாள் கூட்டம் முடிவுக்குவந்தது.

மறுநாள் கூடிய கூட்டத்தில் காலையில் டாக்டர்ஷ்ராடர் என்பவர் இந்தியா முழுமைக்கும்பொதுவானபாஷையொன்றுவேண்டியதைக்குறித்து ஒருவியாசம்வாசித்தார். அதில் ஸம்ஸ்கிருதத்தை இலகுவாக்கி உபயோகிக்கலாமென்று சொன்னார். சாயந்திரம் டாக்டர் டி. எம். நாயர் இந்தியாவிலுள்ள ஏழைகளை காப்பாற்றவேண்டியதின் அவசியத்தைப்பற்றி ஒருவியாசம் வாசித்தார்.



## CURRENT TOPICS AND NOTES.

## காலவிசேஷங்களும் குறிப்புகளும்.

### Plague Prevention.

### பெருவாரிக் காய்ச்சலைத் தடுப்பதெப்படி?

இந்தியாவில் உண்டாகும் கொள்ளை நோய்களில் ஜனங்களை அபரிமிதமாய்க் கொள்ளைகொள்ளும் நோய்கள் மூன்று. அவை: (1) வாந்திபேதி அல்லது 'கலரா' (2) அம்மைநோய், (3) பெருவாரிக்காய்ச்சல் என்று சொல்லும் 'ப்ளேக்'. இவைகளில் 'ப்ளேக்' என்னும் பெருவாரிக்காய்ச்சலின் கொடுமை இந்தியாவில் இப்பொழுது அதிகமாயிருந்துவருகிறது. இந்த நோயைத்தடுக்க வழியென்ன? இது பரவாது தடுக்க மார்க்கமென்ன? இதைப்பற்றி பெங்களூர் ஆனரெரி அஸிஸ்டெண்ட் ஸர்ஜியன் ஸ்ரீ பி. எஸ். இராமச்சந்திரஐயர் அவர்கள், மைலாப்பூர் ரனடேஹாவில் ஒரு பிரசங்கம் செய்தார். தென்னிந்தியா அஸோஸியேஷன் சங்கத்தார் வேண்டுகோளின்பேரில் ஸர்ஜியன் ஜெனரல் பி. எச். பென்ஸன் அக்கிராசனாதிபதியாக வீற்றிருந்தார்.

ஸ்ரீ இராமச்சந்திர ஐயர் 'ப்ளேக் கமிஷன்' மெம்பராய், பம்பாயில் 'பாரெல்' என்னுமிடத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் சாஸ்திரபரீக்ஷை சாலையில் பழகி ப்ளேக்மூலம் இன்னதென்று அறியச் சிறிதுகாலம் உழைத்துவந்தார். அவர் சொன்னதிலிருந்து 'ப்ளேக்'வியாதி மனுஷனைப் பற்றினதல்லவென்றும், ஆனால், எலியைப்பற்றிய அவ்வியாதி, ஈக்கள் மூலமாய் மனுஷனைப் பாதிக்கிறதென்றும் தெரியவந்தது. ப்ளேக்வியாதிபரவுவதற்கு மூன்றுவழியுண்டு என்று சொல்லலாம். (1) பூமியிலிருந்து புழுதிமூலமாகப்பரவலாம். (2) மனிதன் உட்கொள்ளும் ஆகாராதிமூலமாப்பரவலாம். (3) ஒரு மனிதனிடமிருந்துமற்

றொருவனுக்குத் தொத்திப்பரவலாம். இந்த மூன்று விதத்திலும் ப்ளேக் வியாதி பரவுவதாக எண்ணக் காரணமில்லையென்று காட்டினார்.

(1) பூமியிலிருந்து புழுதிமூலமாகப்பரவ, அந்த வியாதியின் ஜீவஅணு (Microbe) மண்ணில் புழுதியில் வசிப்பதில்லையென்று பரீக்ஷித்தறிந்திருக்கிறார்கள்.

(2) ஆகாரத்தின் மூலமாகவும் அது பரவுவதில்லை. ஏனென்றால், உணவுப் பொருள்களின் மூலமாகத் தொத்திப்பரவும் குணம் அந்த ஜீவஅணுவுக்கில்லை.

(3) மனிதனுக்கு மனிதன் தொத்திப்பரவலாமோவென்று பார்த்தால், அதுவும் காலற்ற கதையாகத் தான்சொல்லவேண்டும். ஏனென்றால், 'ப்ளேக் மைக்ரோப்' மனிதன் தேஹத்திலிருந்து தொத்திப்பரவும் குணமுள்ளதாகவுமில்லை.

பின்னை எப்படித்தான் இந்த வியாதிபரவி ஆயிரக் கணக்கான ஜனங்களைக் கொள்ளைகொள்கிறதென்று ஊன்றி விசாரிக்குமளவில், இது மனிதனைப்பற்றி மனிதனிலுதித்துப் பரவும் வியாதியல்லவென்று தெரிகிறது. ஆனால் இதன் ஸ்வபாவம்தான் என்னவெனில்: 'ப்ளேக்' முக்கியமாய் எலியைப்பற்றி எலியின் தேஹத்திலுதிக்கும் ஒரு வியாதி. இந்தவியாதி எலியினிடத்தே முதலில் உண்டாகிறது. எலியினிடத்திலுண்டானது ஈக்கள் எலியின்பேரிலும் மொய்த்து மனிதன்பேரிலும், அவன் உண்டுடுத்துப்புழங்கும் துணிமணிகளின்பேரிலும்மொய்ப்பதால், அந்த வியாதிவித்து ஈக்கள் மூலமாகப்பரவுகிறது. 'ப்ளேக் என்னும் பெருவாரிக்காய்ச்சலின் ஜீவஅணுக்கள்ஈக்களின் மூலமாகப் பரவுந்தன்மை வாய்ந்ததாயிருக்கிறது. அம்மைகுத்துகிறவன். சதையைக்குத்தி அம்மைப்பாலை இரக்தத்தில் கலக்கிறாப்போல், ஈக்கள், ப்ளேக்வியாதி கொண்ட எலிகளின்மேல் மொய்த்து அதன் சத்தைக்கிரகித்து மனிதன்மேல் மொய்த்து அதன் துதிக்கைபோன்ற கைகளின் நுனியிலுள்ள கூர்மைவாய்ந்த நுனிகளால், மனிதன் சதையைக் குத்தி ரக்தத்தில் கலக்கச் செய்கிறது. ஆகையால் ப்ளேக்வியாதிதொலைய, எலிகளைத் தொலைக்கவேண்டும். ஏனெனில் அந்தக் கொள்ளைநோய்க்கு மூலஸ்தானமாயிருப்பது எலிகளே. எலிகள் இருந்தால் அவைக்கு ஸ்வபாவமான அந்தவியாதி அவைகளைப் பீடிக்கும்தான். எலிகள் மனிதன் வீட்டிலிருப்பதாலும், ஈக்கள் எல்லாவற்றிலும் மொய்க்கும் ஸ்வபாவமுள்ளவைகளாக விருப்பதாலும், இந்த வியாதி ஈக்களின் மூலமாகப் பரவிவருவதற்குத் தடையில்லை. சுத்தமான இடத்தில் ஈக்கள் அதிகமாக இருப்பதில்லை. அழுக்கு கசுமாலம் உள்ள இடங்களில் ஈக்கள் அதிகமாய் மொய்க்கும். ஆகையால் ஈக்களைப்போக்க வீடுவாசல்களையும் சாக்கடைகளையும் சுத்தமாய் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். இந்த விஷயத்தில் சுதேசிகளில் சுத்தமாய் வசிப்பவர்களென்று பேர்பெற்ற பிராம்மணர்களும் ஊழலாயிருக்கிறார்கள். சமைக்கிற இடத்தைமட்டும் மெழுகிவிட்டு, கொல்லை, முற்றம், சாக்கடை முதலான இடங்களை அழுக்கு நிறைய வைத்திருக்கிறார்கள். இந்த அழுக்கு இருப்பதற்கு அடையாளம் ஈக்கள் அவர்கள் வீட்டில் நிறைய இருப்பதே. அன்றி வீடுகள் எலிகள் வாசத்துக்கு வசதியாக விருக்கிறது. எலிகளுக்கு இத்தேசத்தார் வீடுகளில் ஆகாரம் பூர்த்தியாகக்கிடைப்பதா யிருப்பதால் அவை, ஒன்று, பத்து, நூறு, ஆயிரமாகப் பல்கிப் பெருகுகின்றன. இதற்கு விமோசனமாகப் பூனைகளை வளர்க்கவேண்டு மென்றும் பூனைச்சந்தையேற்படுத்தி நன்றாக எலிபிடிக்கும் பூனைகளுக்கு வெகுமதி கொடுக்கவேண்டு மென்றும் ஸ்ரீ இராமச்சந்திரய்யர் சொன்னார். அதற்கு ஸர்ஜியன் ஜெனரல் பென்ஸன் நன்றாகப்பதில் சொன்னார். பூனையை வளர்த்துவந்தால், வளர்க்கும்பூனைக்கு வயிறுநிறைய ஆகாரம் கிடைப்பதாயிருப்பதால் அது எலிபிடிக்க முயலுவதில்லை. வீட்டில் பழகும் பூனைக்கு எலிபிடிப்பதைவிட, சமையலுள்ளிலிருக்கும் பாலை வீட்டுக்காரியை ஏமாற்றிக்குடிப்பது இலகுவாயிருக்கிறது. இந்தப் பரீக்ஷை நாம் செய்து பார்த்ததில், வளர்க்கும பூனை சாப்பாட்டு நேரமறிந்து எதிரேவந்துட்கார்ந்து கொண்டு வெகு செல்வமாய்க் கொஞ்சுவதுபோல மியூ, மியூ வென்று கத்தி 'என் பங்கு எனக்கில்லையா?' என்று கேட்பதுபோல சத்தம் போட்டு இலைக்கு முன்பால் உட்கார்ந்துகொண்டு பூனைத்தபஸ் செய்கிறது. அதைக் கவனிக்காதுவிட்டால், எழுந்து சுற்றிக்கொண்டுவந்து வாலைத்தூக்கிக்கொண்டும் முதுகை வளைத்துக்கொண்டும் மேலே விழுந்து அதன் மிருதுவான சர்மத்தால் எஜமானைத் தேய்க்கிறது. அதன் ஜாலத்துக்குவந்து சிறிது ஆகாரம் கொடுத்தால் தின்றுவிட்டுத் தூங்கப்போய் விடுகிறது. ஆகையால் வளர்க்கும்பூனை எலிபிடிப்பது, உலகப்பற்றுள்ளார் ஸ்வாமி காரியம் பார்ப்பது போல் "வழவழா"த்தான். ஆகையால் தேஹசுத்தம் வீடுவாசல் சுத்தத்தால் எலிக்கும் ஈக்களுக்கும் இடங்கொடுக் காமலிருந்து மனோசுத்தத்தால், தப்பித்தவறி அந்த வியாதியின் ஜீவஅணுபற்றினால்

அது நம்மைப் பாதிக்காதபடி திடகாத்திரம் பெறுவதே ப்ளேக் பரவாமலிருக்கப் பரமசாதகமானவழி. மனோசுத்தி யில்லாவிட்டால் மற்றதெல்லாம் முற்றும் பலிக்காது.

---

இந்தியா கௌன்ஸில்பில், லார்ட்ஸ் சபையில் பாஸாய் விட்டது. சென்னை, பம்பாயைத் தவிர மற்றஇராஜதானிகளுக்கு எக்ஸிகியூடிவ் கௌன்ஸில் கொடுப்பதற்கான மூன்றாவது பிரிவை லார்ட்ஸ் சபையார் அந்த மசோதாவினின்றும் நீக்கிவிட்டார்கள். அதைப்பற்றி இந்தியாவெங்கும் பொதுக்கூட்டங்கள்கூடி அந்தப்பிரிவில் கண்டவிஷயம் மசோதாவிலிருக்கவேண்டுமென்றும், அதைநீக்கினது தப்பென்று ஆக்ஷேபித்தும் விண்ணப்பங்கள் அனுப்பிவருகிறார்கள். அந்தமாதிரி சபையொன்று சென்னையிலும் கூடியது. சீமையிலுள்ள கவர்ன்மென்டாருக்கு லார்ட்ஸ்சபையில் அவர்கள் கக்ஷிபலம் அதிகமாயில்லை. ஆதலால் காமன்ஸ்சபையில் அந்தமசோதா ஆலோசனைக்குவரும்பொழுது மூன்றாவது பிரிவை மறுபடியும் சேர்த்துவிடுவார்கள். சேர்த்து பாஸ்செய்துவிட்டால் அந்தமசோதா மறுபடியும் லார்ட்ஸ் சபையார் சம்மதத்திற்குப்போகும் அப்பொழுதுஅவர்கள் சம்மதிக்காவிட்டால், இருசபையாருக்குமுள்ள இந்த வித்தியாசத்தினால் வில்லங்கம்நேரிடும். அப்பொழுது மசோதா தடைபட்டு நிற்கநேரிடும்.

---

அடுத்த எப்பிரல்மீ 17உ இராஜப்பிரதிநிதிசபையில் சட்ட நிரூபணமந்திரியாகவிருக்கும் ஸர் எர்ல் ரிச்சர்ட்ஸ் அவர்களுடைய 5-வருஷநியமனம் முடிவுபெற அவர் சீமைக்குப்போகிறார். அவருடைய ஸ்தானத்தில் இப்பொழுது வங்காளத்தில் அட்வொகேட் ஜெனரலாயிருக்கும் மிஸ்டர் எஸ். பி. ஸிம்ஹா என்னும்பிரதாபபாரிஸ்டர், சட்டநிரூபணமந்திரியாக நியமிக்கப்பட்டிக்கிறார். இந்தியா மந்திரியின் சிபார்சின்பேரில் மாக்ஷிமைதங்கிய சக்ரவர்த்தியவர்கள் இவரை அவ்வேலைக்கு நியமித்துவிட்டார். இவர் வங்காளதேச சுதேசியாதலால், லார்ட்மார்லியின் வாக்கு இவர் நியமனத்தால் நிறைவேறினதாகும். இவர் ஒரு பெரியஜமீன். ஒரு பெரியஜமீன்தார்வம்சத்திலுதித்தவர். இவருக்குமாசம் ஒன்றுக்கு 30 அல்லது 40 ஆயிரம் ரூபாய் வருமானம் உண்டாம். சட்டநிரூண மந்திரியின் சம்பளம் மாசம் 1-க்கு ஆறாயிரத்துச்சொச்சம்தான்.

---

## திருமயிலை மஹோத்சவம்.

### 5-ம் திருவிழா, ரிஷபவாஹன சேர்வைச்சிறப்பு.

திருமயிலை கபாலீசுவரர் கோயிலில் பங்குனி உற்சவம் வெகு விமரிசையாக நடந்து வருகிறது. இவ்வுற்சவத்தின் ஐந்தாம் திருவிழாவாகிய ரிஷப வாஹன சேர்வை மார்ச்சுமீ 31உ புதன்கிழமை யிரவு வெகு நன்றாக விருந்தது. அப்பொழுது கண்ட காட்சிகளை நினைக்கில் நாமிருப்பதுபூலோகம்தானோ அல்லது கைலாசமோவென்று இன்னமும் சந்தேகம் தோன்றுகிறது. இந்தத் திருவிழாக்கள் ஆகம விதிப்படி மஹான்கள் யோகசமாதியில் அனுபவித்த ஸ்வானுபவ யோகமாம் தத்துவ ஞான தரிசனத்தை ஜீவகோடிகள் உய்யவென்று, எல்லாருக்கும் விளக்க இத்திருவிழாக்கள் ஏற்படுத்தப்பட்டன. சனிக்கிழமைதினம் காலமே கொடியேற்ற சடங்கு வெகு நன்றாயிருந்தது. அது குண்டலியிலிருந்து "சுத்த சர்வ வியாபக பிரம்மஜ்ஞான அறிவாகாசமயமான" சிவலிங்கரூப கபாலீசுவரர் சந்திர சூரியாக்னி யென்னும் இடை பிங்கலை சுஷும்னை நாடிகளூடேசென்று கபாலமத்தியமாம் பிரம்மரந்திரத்திலேறி நிற்கும் அவஸ்தையில் தத்பராத்மக ஸ்தானமாம் மஸ்தகமத்திய ரந்திரம் வரையிலேறி அங்கே அறிவுமயமாய் நிற்பதைத் தெரிவிப்பதாயிருந்தது.

"சுத்த சர்வவியாபக பிரம்மஜ்ஞான அறிவாகாசமயமாய்" விளங்கும் கபாலீசுவரர் தாம் "அறிவாகாசமயமாத்திரமாய் நின்று" "சர்வம் விஷ்ணுமயம் ஜகத்" என்றபடி, எல்லாம் தம் சக்தியாம் அறிவுமயமேயன்றி வேறல்லவென்று போதிப்பான் திருவிழா நடத்துகிறார். இப்போதனை பலிக்குமாறு, இக்காலத்தில் "மாஜிக்லான்டர்ன்" ஜாலக்கண்ணாடி முதலிய சாதனங்களைக்கொண்டு பாமரஜனங்களுக்கு அறிவூட்டுவதுபோல, பெரியோர்கள் ஏற்படுத்திய ஆகமவிதிப்படி தந்திரமாய் தத்துவபோதம்செய்து வருகிறார். தினம் யாகசாலையில் ஹோமாக்னி குண்டத்தில் (சுத்தசர்வ வியாபக பிரம்மஜ்ஞான அறிவாகாசமயத்தின் அறிகுறியாயுள்ள) சுத்த முத்த நித்தியாக்னி வளர்ந்துவர, ஸ்வாமி தன்னைத்தானே யஜ்ஞம் செய்து தானே இப்பிரபஞ்சமெல்லா மாக யாகத்திலிருந்துற் பன்னமாய் விளங்குகிறாரென்பதை நன்றாக விளக்குகிறார். இந்தக்கருத்தின்படி சுவாமியானவர் முதல்நாள் யாகாக்னியிலிருந்துதித்து பிரணவ ஸ்வரூபியாய் (எல்லாஉயிரும் தானாய்) விளங்குவதைக்குறிக்க பச்சைநிறத்தை உபாதியாகக்கொண்டு, எப்பொழுதும் பசுமைநீங்காத புன்னைமரநிழலில் திருக்கோலங்கொண்டு எழுந்தருளி பக்த

கோடிகளுக்குச் சேர்வை சாதித்தருளினார். இது ஸர்வபூதங்களிலும் உயிர்க்குயிராய் வசிப்பவர் தாமேயென்று காட்டியதுபோலும். "ஓங்காரி யென்பாள் அவளொரு பெண்பிள்ளை, நீங்காத பச்சை நிறத்தையுடையவள, ஆங்காரியாகியே ஐவரைப்பெற்றிட்டு, ரீங்காரத்துள்ளே யினிதிருந்தாளே" என்பது இங்கே தியானிக்கத்தக்க திருமந்திரோபதேசமாம்.

இரண்டாம்நாள் ஸ்வாமி சந்திரப்பிரபையில் எழுந்தருள, அம்மன் பரைவாக்காம் கிளிவாஹனத்திலும், சுப்பிரமணியர் பிரத்தியகாத்மனும் ஹம்ஸவாகனத்திலும் எழுந்தருளி சேர்வை சாதித்தார்கள். பகவான் "சந்திரபிம்பம்" போல் தேஜோமயமாய் "விளங்கிய ஜோதி மத்தியில் "ஜோதிர் அந்தர்க்கதம்மன:" என்ற சுருதிவாக்குப்படி "திரிஜகத் சிருஷ்டிஸ்திதிவ்யஸன கர்ம கிருத்" என்றுள்ளவாறு ஜகன்னாதனாய்விளங்க, அம்பாள் சிருஷ்டிசைதன்னியமாம் பரைவாக்காகவும், சுப்ரமண்யர், ஹம்ஸனும் சுத்தாத்மனாகவும் விளங்கலுற்றனர்.

பகலுண்டானால் இருளும் அதைத் தொடர்ந்தே வரும்; உயிருண்டானால் உடலும் அதைத்தொடர்ந்தேவரும். அதுபோலவே அடுத்தநாள் தான் உயிரேயன்றி உடலும் தானேயென்று காட்டுவான் ஸ்வாமி குண்டோதரன் மீதிலும், அம்பாள் குண்டோதரிமீதிலும், சுப்ரமணியம் பத்மாசுரன்மீதும் ஆரோகணித்து சேர்வை தந்தருளினார்கள். வாஹனமெல்லாம் உபாதிலக்ஷணங்களாம். ஆத்மன் ஜீவனாகி, உடல்பெறவும் இராகத்துவேஷாதி அவஸ்தாத்மகனாகிறான். சந்திரன், கிளி, ஹம்ஸன் இவை இந்திரியாத்மகத்தை விளக்கும் இந்திரியாத்மக உபாதிகளாம்.

நான்காம்நாள், ஸ்வாமி ஆமையின்பேரிலுள்ள ஸர்ப்பவாகனத்தில் ஆரோகணிக்க, அம்பாள் காமதேனு வாகனத்திலும், சுப்பிரமண்யர் ஆட்டுக்கடா வாஹனத்திலும் ஆரோகணித்தருளினார்கள். இது சதுரந்தக்கரணாத்மகமாம் மனஸ் புத்தி சித்தம் அகங்காராதிகளோடு கூடியஜீவனைக்குறிக்கிறது. ஆமை இந்திரியாத்மகத்திற்கு அதிஷ்டானம். அதன் பேரிலுள்ள எழுதலை ஸர்ப்பம் சப்தலோக பயமாக விளங்கும் லோகயாத்ராலக்ஷண சதுரந்தக் கரணத்திற்கு அறிகுறியாம். காமதேனு ஜீவாத்மாவின் இச்[...]தி, ஆடு கிரியாசக்தி, ஸர்ப்பம் ஞானசக்[...]

ஐந்தாம்நாள் ரிஷபவாஹன[...]ஸ் ஸத்வம் என்னும் முக்குண[...]ம் அதிஷ்டானமுமான [...]ச்

[...]ya, M[...]
[...]eka Chinta[...]
All R[...]
(Copyri[...]
[...]ople.]
[...]ke the earth, and like a livi[...]

சாக்ஷிக்கு இருப்பிடமாயுள்ளது. சதுரந்தக்கரணங்களுக்கும் சாக்ஷியாயுள்ள உட்காரணம் இதுவாம். இதனுண்மையையுணர்ந்தார் இத்திருநாளின் விசேஷத்தை மதிப்பார். இது நாக்குமத்திய விசுத்திஸ்தானத்தில் அறிவாகாசமயம் மனச்சாக்ஷி ரூபமான திருகுணாத்மகமாய் விளங்குவதைக் குறிப்பதாம். மனச்சாக்ஷி ஜோதிர்மயமாய் விளங்குவது பற்றி வெள்ளிரிஷபம் இதற்கு அறிகுறியாயிற்று. நேற்றிரவு காட்டிய பாணவேடிக்கைகளில் ரிஷபவாஹன சேர்வையின் சூக்ஷ்மத்தை விளக்குவான் ஜோதிர்மயமான வ்ருஷபம் ஒன்றுசெய்து அதில் ஜோதிமயமான திருவாசியொன்று வைத்து அதனூடே "சுத்தசர்வ வியாபக அறிவாகாச மயமான" ஸ்வாமி ஆகாசலிங்கமாய் விளங்குவதைக்காட்டும்படியான பாணவேடிக்கை வெகு நன்றாயிருந்தது. அங்கே ஜோதிவிருக்ஷம், அக்னிக்கோட்டையின் நடுவே விளங்கும் ஆதிபராசக்தியாம் நீலப்பிரகாச பரஞ்சோதி வெளிச்சம், இடகலை, பிங்கலை, சுஷும்னை நாடிகளாம், சிருஷ்டிஸ்திதிஸம்ஹாரசக்திகள் நடமாடும் ஆகாசவீதியொத்தசூன்னியாகாரத்திரிபுடிஞானமயாகாசநாடிகள்(நடமாடும் ஆகாசவீதி 'நாடி') வாண வேடிக்கைகளாகக் காட்டப்பட்டன. கடைசியில் சொன்னமுக்கியநாடிகள் மூன்றும் ஒருபெரியசர்ப்பத்தின் இருபக்கங்களிலும் இடகலைபிங்கலைநாடிகள்ஜோதிர்மயமாக ஓடிநிறக அவ்விரண்டிற்கும் நடுவே சுஷும்ன என்னும் சூன்னியநாடி சூன்னியாகாரமாய்விளங்கியது. இந்த இரகசியங்களெல்லாம் நாம்இட்டுக்கட்டினவையல்ல. ஆகமங்களையாராய்ந்தால் இவை வெகு நன்றாகவிளங்கும். திருநாளுக்குவரும் பக்தஜனங்களுக்கும்இவை தெரியாதவையல்ல. இங்கிலீஷ்படித்துவிட்டு ஸ்வபாஷை, ஸ்வமதம், ஸ்வசிந்தை, ஸ்வஞானம் இதையெல்லாம் பரிகொடுத்துவிட்டு "கானமயிலாடக்கண்டிருந்த வான்கோழி தானுமதுவாகப்பாவித்து" நடித்ததுபோல் அரைகுறையாய் இங்கிலீஷ்படித்துவிட்டு தாம் "இங்கிலீஷ்காரர்" ஆய்விட்டதாக நடிக்கும் நவநாகரீகபுஞ்சங்களைத்தவிரமற்றவர்கள்இதையறிந்தேயிருக்கிறார்கள். உதாரணமாக ரிஷபவாஹன சேர்வையன்று ஆயிரக்கணக்காய் அச்சிட்டு "பரமனையேபாடுவார் பக்தஜனசபையார்களில் ஒருவரால் தரிசனத்துக்கு வந்த சிவநேசச் செல்வருக்கு இலவசமாய் வழங்கிவந்த பரமசிவஸ்தோத்திர பஞ்சரத்ன கீர்த்தனம்" என்னும் சிறுபுஸ்தகத்திலிருந்துதெய்வ வணக்கச் செய்யுளைமட்டும் கீழே பிரசுரிக்கிறோம் அதிலிருந்து ரிஷபவாஹன சேர்வைக்கு வந்த பக்தகோடிகளின் உள்ளக்கருத்து உணர்வதெளிதாகும்.

"வேதாந்த நிலையாகிச் சித்தாந்தத்தின் மெய்யாகி
[சமரசத்தின் விவேகமாகி
நாதாந்த வெளியாகி முத்தாந்தத்தின் நடுவாகி
[நவநிலைக்கும் நண்ணுகாகி,
மூதாண்ட கோடி யெல்லாந் தாங்கிநின்ற முதலா
[கிமனுதீத மூத்தியாகி,
வாதாண்ட சமயநெறிக்கமை யாதென்றுமௌன
[வியோமத்தினிடை வயங்குந் தேவே!"

என்று எடுத்து திருவருட்பிரகாசவள்ளலார் திருவடிவாழ்த்துக் கூறியிருக்கின்றனர்.

மேலும் முதல் கீர்த்தனத்தில் 'புகலருமயிலை வாழ் புண்ய கபாலீசனும், சுகஞான சுயஞ்சோதியே தோன்றுநீதியே!"

[நின்று
"நனவிற் சுழுத்தியில் நாட்டங்கொண்டே தான்
தனையறிந்தவருடன் சார்ந்துணரச் செய்யின்று." (1)

"சருவகேவலாவஸ்த்தை சந்ததமடையாது
நிருவிகற்பஞானமாம்நிலைதருவாயிப்போது !" (2)
[மேவா
"சகஜ நிஷ்டையைக் கூடும் சான்றோரிடத்தின்
தகநிலையாசண்முகனைம்புலனடக்கவா!" (3)

என்றுபாடியிருக்கிறார்கள். இதை எத்தனைஜனங்கள் பஜனைக்கோஷ்டியில் பக்தர்கள் செய்யும் உருக்கமான பஜனைமூலமாய்க் கேட்டு மனங்களித்து உள்ளனர்! கடைசிக்கீர்த்தனையில் "சங்கற்பம் விட்டிரு மனமே, தானுய்வரும் சாதனைதினமே" யென்று பல்லவி பாடியிருப்பதொன்றேபோதும் உண்மையாளர்க்கு உய்யவழிகாட்ட.

---

மைசூர் திவானுயிருந்த ம-ா-ா-ஸ்ரீ, வி. பி. மாதவராவ், ஸி. ஐ. இ. அவர்கள் இந்த மார்ச்சுமீ 31உயோடு அவரது திவான் வேலையை விட்டு நீங்கிப்போக நேரிட்டுவிட்டது. அவருடைய ஸ்தானத்தில் அவருக்குப் பதிலாக ம-ா-ா-ஸ்ரீ, டி. அனந்தராவ் அவர்கள் திவானுக நியமிக்கப்பட்டு வேலைபார்த்துவருகிறார். ம-ா-ா-ஸ்ரீ, நஞ்சுண்டையா அவர்களும், ம-ா-ா-ஸ்ரீ, பட்டண்ண செட்டியவர்களும் கௌன்ஸில் மெம்பர்களாக நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். ஸ்ரீமாதவராவ் திவான்வேலை பார்த்துவந்தது அவ்வளவு மேலாகவில்லை அவர் துரைத்தனத்தில் அனேக ஊழல்கள் உண்டென்று சொல்கிறார்கள். மாதவராயர் வாயில்தேனொழுகப்பேசும் வல்லமையுள்ளவரென்பதை எல்லாரும் ஒப்புக்கொள்கிறார்கள். ஆனால் "கை கர்ணைக்கிழங்கு" என்று சொல்கிறார்கள். மன,மொழி, மெய்கள் ஒன்றுபடாது பேதப்பட்டு நிற்குங்கால், ஆத்மா தூர்வழியில் நிற்பது நிச்சயமென்பதற்கு இது ஒரு உதாரணம்.

---

இந்தியா கௌன்ஸில்ஸ்பில், காமன்ஸ் சபையில், இரண்டாந்தடவை வாசிக்கப்படலாயிற்று. அப்பொழுது எதிர்க்கக்ஷியைச் சேர்ந்த மிஸ்டர் பால்ஃபார் அவர்கள், இந்தியாசம்பந்தப்பட்ட விஷயத்தில், பார்லிமெந்து சபையார் கக்ஷிப்பிரதிகக்ஷி கட்டிக்கொண்டு இரண்டுபட்டு நிற்கிறார்கள் என்பதை உலகறியக்காட்ட இஷ்டமில்லாது அந்த மசோதாவுக்கு விரோதம் செய்யாமலிருக்கிறார்களேயன்றி, அவரைச்சேர்ந்த எதிர்க்கக்ஷியார், இந்தியா சீர்திருத்தங்கள் சம்பந்தப்பட்ட விஷயத்தில் சிறிதும் அச்சீர்திருத்தங்கள் செய்ய இசைந்தவர்களாகவாவது, அவற்றின் பொறுப்பைவகிக்க இஷ்டமுள்ளவர்களாகவாவது இல்லையென்று நன்றாக வற்புறுத்திக் கூறவிரும்புகிறேன், என்று சொன்னார். இப்பொழுதுள்ள லிபரல்கக்ஷியாருக்குப் பின் எதிர்க்கக்ஷியார் அதிகாரத்துக்கு வரநேரிட்டால் அவர்கள்இந்தியா விஷயத்தில் எவ்வளவு அனுகூலமாக விருப்பார்களென்பதைக் காட்ட இவர் இப்படிப் பேசினார் போலும்!

---

இராஜப் பிரதிநியவர்கள் சட்ட நிரூபண சபையில், மிஸ்டர் கோக்லே முதல் எல்லாரும் இந்தியா சீர்திருத்த வற்பாட்டைப்பற்றி அவரவர் அபிப்பிராயத்தை வெளியிட்டுப்பேசினார். லார்ட்மார்லி கோக்லே பேச்சைக் கேட்டுக்கொண்டு இச்சீர்திருத்தங்கள் செய்யத்தலைப்பட்டுவிட்டார் என்று சிலர் கட்டும் பழிச்சொல் முற்றும் பொருந்தாதென்று, மிஸ்டர்கோக்லேமட்டுமல்ல, இராஜாப்பிரதிநிதி
யன்களுங்கூட [illegible] ன்றுயெடுத்துக் காட்டிப்
போனவ [illegible] இ[illegible]சாசக் [illegible] ழுது லார்ட் மார்லி செய்ய
விணவ[illegible]த்தி. [illegible] ந்தங்களுக்குக் கெல்லாம்
இவ[illegible] ண்டார் முந்தி உடன்பட்
டே: இது தமோராஜ [illegible] என்று லார்ட் மின்டோ
களுக்கும் ஆதார[illegible] காணக்கச்சொன்னார்.
ணத்மகமாம். மன